# கம்பர் பிள்ளைத் தமிழ்



முதற்பரிசில்

புலவர். நா. மீனாட்சி சுந்தரம், பி.லிட்.,

(மீனவன்)

இரா.செ. உயர் பள்ளி,

புதுவயல்.

கடவுள் துணை

# விநாயகர் காப்பு

## (பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்)

சீருலவு மிதழிமுடி யணிகின்ற பரமனுளச்
சிந்தையினில் மகிழ்வை யூட்டிச்
செழித்துயர்ந்த வரைமேரு தனிலன்று வியாசருரை
பாரதத்தை வரைந்து காட்டி,
தாருலவு கின்றதனித் தம்பிமணம் வள்ளிகொளத்
தான்கரியாய் வந்து காத்துத்
தந்தைரதத் தச்சுபொடி யாகவனே வைத்ததனி
யானைமுகன் தாள்கள் காப்பாம்;
ஏருலவு கின்றதமிழ் எழுந்துநட மாடவென
எண்ணிநறுங் கவிதை என்னும்
எழில்துளவ நறுமாலை சூட்டிவளர் இராமனடி
இதயத்தில் இனிது போற்றிப்
பாருலவு காவியமாய் வரவிடுமோர் கம்பனெனும்
பசுங்குழவி பற்றி யிங்கே
பகரவரு கின்றதமிழ்க் கவிகளெனும் மலர்களிவை
பூடர்ந்துலகு மணக்க வென்றே.

நூல்

# காப்புப் பருவம்

## திருமால்

(பன்னிரு சீர் ஆசிரிய விருத்தம்)

2 பெருந்தேன் அளிக்கும் செழுங்கமலப்
பெண்ணைப் பிரியா மார்பானை,
பிறங்கும் பச்சை எழில்வடிவப்
பெம்மான் பார்த்த சாரதியாய்
இருந்தே கீதை இசைத்தவனை
இலங்கும் ஆழிப் புயல்வண்ணன்
எழுதா மறையாய் இலங்குபவன்
என்று லகோதும் எம்மானை,
பொருந்தும் கவிதைப் பூவிட்டுப்
புகழ்ந்து வணங்கிப் போற்றிடுவாம்;
பொன்னார் கமலச் சேவடியைப்
பூமேற் பதித்த புண்ணியனோர்
மருந்தே யனையான் இராமகதை
மகிழ்ந்து பாடப் பிறந்தவனை
மன்னன் கவிதைக் கம்பனெனும்
மகிழ்சேய் தன்னைப் புரக்கெனவே. (1)

## சிவபெருமான்

3 பொங்கும் கிழிப்பொன் தருமிபெறப்
புகழ்சால் கீரன் வெம்மைபெறப்
புலவன் ஆன புரவலனை,
பூந்தா துகுக்கும் நறுங்கொன்றை
தங்கும் முடியில் நதியரவம்
தாங்கும் மதிசால் வேணியனை,
தாயாம் உமையாள் இடத்தவனை,
தண்ணார் மதுரைத் தனியரசை,
எங்கும் திருநீற் றொளிபரப்பி
இயலும் சிவனை, வணங்குதுமே;
இதயக் கமலம் தனிற்றமிழை
இலங்கும் திருவென் றேற்றியவன்,
கொங்கும் நாணக் கவிதருமோர்
கோலக் கம்பன், இயல்கவிஞர்
குழாத்துள் மன்னன், எனவருமோர்
குழந்தை தன்னைக் காக்கவென்றே. (2)

## சிவசக்தி

(வேறு)

(இருபத்தெண்சீர் ஆசிரிய விருத்தம்)

4 நீடாழி உலகங்கள் அன்னையெனத் துதிபேச
நிகரிலா திலங்கு வாளை,
நித்திலத் தனிமூரல் ஒளிவெய்யில் ஒளிவெல்ல
நிற்கின்ற ஞான மாதை,
நினைக்கின்ற மனமேறி அருள்கின்ற சீமாட்டி
நேசந்தை உயிர்கள் மீது
நிறுத்துமொரு பெண்ணமுது சகலவுயிர் புவனங்கள்
நிலைக்கவருள் செய்கு வாளை,
பீடாழி துயிலுமொரு பேராழி கரமுடைய
பெம்மானின் தங்கை யாகி,
பேதங்கள் கடந்துலகு பெருமையுற நிறுத்துமொரு
பெருமானின் துணைய தென்று
பேசரிய மறைநான்கும் ஆநந்த வல்லியெனப்
பேசவரு கின்ற தாயை,
பேறுதர வருவாள்தன் பாதமலர் போற்றிமனம்
பேணியே அஞ்ச லிப்பாம்,

ஓடாழி தனையொப்ப உருளுமன முடையவர்கள்
உலகத்தே உயர்ந்து வாழ,
ஓங்கிவளர் வேதங்கள் பணிகின்ற திருப்பாதம்
உயிரெல்லாம் காணு மாறே;
உயிர்கொண்ட படமென்னத் திகழ்கின்ற உருவோடு
கோசலைதன் வயிறு வாய்த்தே
ஓயாத தீமையெனும் அரக்கரினம் அழியவொரு
கோதண்ட பாணி யாகி,
பாடாழி சூழிலங்கை தனையன்று கடந்தேகிப்
பாவவடி வான வேந்தன்
படுமாறு சரங்கோடி புகவிட்ட பரந்தாமன்
திருவடிகள் பணிந்து பாடும்
பைந்தமிழர் குடிக்கழகு செய்யவரு தமிழ்க்கவிதை
பகர்குழவி கம்ப னுன
பாலகனும் உவந்துநலம் பல்கிவளர்ந்
துயர்த்துலகில்
பல்வளமும் பெறுக வென்றே. (3)

## காப்புப் பருவம்

### விநாயகர்

### வேறு

(பதினான்குசீர்ச் சந்த விருத்தம்)

5 கடலலை இடையே துரும்பெனத் திகழும்
    கருத்தினில் திரிதரும் உயிர்கள்;
    கவலையை அறுக்கும் கடகரி வடிவன்,
    கனிதரு பழமதை விரும்பித்
திடமுள உலகம் எனவுயர் இறையைத்
    திகழ்வுற வலம்வரு திருவன்,
    தென்முகக் கடவுள் தன்முதல் மதலை,
    கருணையே சிந்திடு களிறு,
மடலணி கொன்றை யறுகுடன் அணிந்து
    மகிழ்பவன் தாளினை நினைவாம்;
    மரகதக் குன்றம் அனையபொன் உருவன்;
    மழலையம் சொற்கனி கனியும்
தடமலர் அனைய சீதைதன் கணவன்
    தருமெழிற் காவியம் பாடும்
    தமிழ்க்கவி மன்னன் அபயனின் சபையின்
    தலைவனைக் காத்திட வென்றே. (4)

## முருகன்

### வேறு

### (இருபத்தொரு சீர் ஆசிரிய விருத்தம்)

6 புனங்காத்துக் கிளிகடிந்த புண்ணியநற் குறக்கொடியை,
புகழ்கானில் வேட ளுகி,
பொல்லாத வாதிட்டு நிற்கவவள் கூவியதால்
போய்மறைந்து வேங்கை யாகி,
பொன்மாலை கழுத்திட்டுப் புகழ்மாலை கொண்ட
போற்றியே வாழ்த்து ரைக்க [மரர்

வனங்காத்த கரியவனின் உளஞ்சேர்ந்த மருமகனென்
றுலகமெலாம் வணங்கி நிற்க,
வளர்கோடி உயிர்பலவும் படைக்கின்ற வேதா
வம்பிட்டு மறைகள் கூறி, [வை
வளங்கண்ட தமிழ்மாலை பலகோடி யதுசூடி
வாழ்கந்த வேள்நி னைப்பாம்;

தனங்காத்த பூதமெனப் பொய்காத்த மனமுடையோர்
தாரணியில் வாழ்வு கொள்ளத்
தனியரவப் பாயலிடை அறிதுயிலில் ஆழ்ந்துலகு
தான்வாழ மூர்த்தி யாகித்
தத்து-புனல் அள்ளிவரும் சரயுநதிக் கோசலத்
தானெழுந்த இராம பாதம் [தில்

தினங்காக்க வேணடுமெனத் துதிபாடும், நாவுடைய
தெய்வநிலைக் கம்ப நாடன்
தேடரிய வரங்கொண்டு பாடரிய புலவனெனத்
தென்தமிழர் போற்றி செய்யத்
திகழ்கின்ற இக்குழவி அருள்கவிதை உலகத்தில்
திகழட்டும் மன்னன் என்றே. (5)

## நான்முகன்

7 மறையாதி நான்கென்ற கடலோடி யமுதுண்டு
நாவாலே பொழியும் மேகம்,
மகிழ்கலைகள் பலகொண்ட பெருமாட்டி,
தனிலேறு வெள்ளை மஞ்ஞை, [வெண்கமலம்
மகிழ்ந்தேறு நாவுடையன் எண்ணுது பல்லுயிர்
மண்வாழத் தந்த வேதா [கள்
குறையாத கலையிலகும் உலகிலறம் தழையவரு
குன்றுடைய கந்த வேளால்;
குட்டுற்றுச் சிறையுற்றுக் குளிர்வேத மறிவுற்றுக்
குறையில்லாப் பான்மை யுற்றுக்
கோடிபல தேவர்குழாம் துதிசெய்யக்
குறள்மாயன் நாபி பூத்து, [கண்வளரும்
முறையாகப் படைத்துலகை நிறைவிக்கும் நான்
முன்னின்று வணங்கு வோமே; [முகனை
முழுதுலகும் வாழவென ஏந்தியவத் தனியாழி
முழங்கிவரு சங்க மாதி
முற்றுநனி மறைத்துநிறம் மறைக்காமல் தயர
முதல்மகனுய்ப் போந்த மூர்த்தி [தற்கு
இறையாகும் எனக்கவிதை விளக்கேற்றிச் சொற்
இனியபடி அர்ச்சித் தேற்றி [களினுல்
இதயமதில் இராமகதை எனும்பெயரில் வரு
தரவருமோர் குழவி தன்னை [கவிதை
எழிலுவச்சர் குலத்திலணி செய்யவரு
[கம்பனெனும்
இனியவனைக் காக்க வென்றே. (6)

## இந்திரன்

### வேறு

(பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்)

8 அணிசேர் வேள்வி ஆயிரங்கள்
அவைசெய் துயர்ந்த தவமுடையான்;
அமரா வதிக்கோர் அதிபதியான்;
அழகார் சிந்தா மணியுடையான்,
பணிசெய் தேவர் பலருடையான்,
பாராள் குலிசப் படையுடையான்,
பசுவாய்க் காம தேனுடையான்,
பாதம் பணிந்து பரவுதுமே;
மணிசேர் மார்பிற் பொன்னுடைய
மாயன் உலகில் அறம்வளர
மனங்கொண் டுலகில் தோன்றியதை
மலர்வாய் இதழிற் கவியரும்ப,
பிணிசேர் பிறவிக் கடல்நீந்தப்
பெரிதும் துணையாய்ப் பெறுகவெனப்
பேசும் கம்பன் எனுங்குழவிப்
பெம்மான் தன்னைக் காக்கவென்றே. (7)

## திருமகள்

9 செந்தா மரையிற் சேரன்னம்,
சீர்சால் மாயன் அடிவருடி,
சிந்தைக் கோயில் குடிகொண்டு
செகத்திற் கருளும் பெருமாட்டி,
சிந்தா குலந்தீர் செல்வமகள்,
செழிக்கும் கருணைத் திருக்கோயில்,
செல்வப் பயனை உலகுணரச்
செய்யும் திருவை வணங்குதுமே;
வந்தா தரிக்கும் இனியகுணம்
வாய்த்த பெம்மான், தந்தையுரை
வாழக் கானிற் கேகியவன்
வாழ்க்கைச் சரிதம் கவியாக்கி;
கந்தாம் இவன்தாள் பற்றுகெனக்
காட்டும் கருணைப் பெருங்கவியை,
கம்பன் என்னும் திருமகனைக்
கருணை செய்து காக்கவென்றே. (8)

## கலைமகள்

(வேறு)

(பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்)

10 கற்றூர்கள் நெஞ்சத்தில் விளக்காகி, ஒளிர்கின்ற
கலையாகி விளங்கு வாளை,
கள்ளூறி வழிகின்ற தவளநிறக் கமலத்தில்
காலமெலாம் இலங்கு வாளை,
பற்றேடு வேதங்கள் படைத்தோதும் பிரமாவின்
படர்நாவில் தவிசு கொண்டு;
பல்கலையும் வளர்க்கின்ற வெள்ளன்னம் என
பாதங்கள் பழிச்சு வோமே; [வந்தாள்
நற்றுயர் தம்முள்ளே வளர்கின்ற கைகேயி
நாவெழுந்த வரத்தி னாலே
நானிலம் துரந்தேகிக் கானுண்டு இரட்சித்த
கவினிராம வள்ளல் தன்னை,
பற்றாசை விட்டொழியப் பற்றுங்கள் அறம்வளரும்
பாவங்கள் நீங்கு மென்றே
பாடவரு கம்பனெனும் பாவலர்க்கு மன்னவனைப்
பரிந்துநிதம் காக்க வென்றே. (9)

## சத்தமாதர்

(வேறு)

(பதினறுசீர்ச் சந்த விருத்தம்)

11 புகழ்மறை உணர்த்திய பூவார் முகத்தினள்,
புரமெரி சடையவன் பாகத் துடையவள்,
புனிதர்கள் உயர்வுற வேலைப் படைத்தவள்,
பொருகடல் தனிலொரு பாம்பில் அமர்ந்தவள்,
அகழ்ந்தெயி றதுகொடு பூமி பெயர்த்தவள்,
அமரர்கள் அரசனின் காதல் மனத்தவள்,
அரவது தரித்தவன் ஆடக் களித்தவள்,
அணங்கிவர் எழுவர்கள் தாளை வணங்குதும்;
இகழ்பவர் புறமுற ஏந்து புயத்தினன்,
இனியநல் வடிவொடு காணு முகத்தினன்
எழில்பெறு கயலொடு காவிப ழிச்சிடும்
இருவிழி அமுதொடு பார்த்து வளர்ந்தவன்,
மகிழ்வுறு முயர்தமிழ் வாழ வகுத்தவன்,
மனமகிழ் கவியர சான நலத்தவன்,
மதிநிகர் முகமுள கம்பன் எனுமொரு
மயல்தரு குழவியை நாளும் புரக்கவே. (10)

# 2. செங்கீரைப் பருவம்

(வேறு)

(பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்)

12 மண்ணாதி பூதங்கள் இயல்கின்ற உலகத்தில்
மறைநான்கும் வாழ வைத்து
மகமாதி புரிகின்ற முனிவோர்தம் துயர்நீங்க
மாண்பாரும் வில்லை யேந்தி,
கண்ணான விசுவமுனி ஆற்றிவரு மாவேள்வி
கானகத்தே புரிந்து காத்துக்
கனியெழில்வாய் முத்துநகைக் கயல்விழிகொள்
கவினிலவின் கரங்கள் பற்றிப் [சீதையெனும்
பண்ணாரும் இன்பநலம் பார்த்தவள்தன் சரிதை
பசுந்தமிழால் பாட வந்த [யினைப்
பாவரசே! கவியமுதே! தத்துவங்கள் சுவையாகப்
பழுத்துவரக் கவிதை யீன்று
விண்ணாரும் தேவர்களும் வியக்கவரு தமிழ்க்கம்ப!
செங்கீரை யாடி யருளே!
விளைகின்ற சொல்மாரி பொழிகின்ற கவிமன்ன!
செங்கீரை யாடி யருளே! (1)

13 காராழி நிறவண்ணன் அவதாரம் பலவாகிக்
காட்டுமுயர் உண்மை யெல்லாம்
ககனங்கள் முடியாக நின்ருடும் உலகத்தில்
கடல்போலப் பெருகு மக்கள்;
நீராழி அலைபோல வருகின்ற துயரத்தில்
நினைவின்றிச் சிக்கி, என்றும்
நிலையாக இருக்கின்ற துயர்மாற்றி இன்பங்கள்
நிதங்கோடி எய்த வைக்கும்
பேராளன்! என்றுமறை புகழ்ந்தோத வருகின்ற
பெம்மான்தன் லீலை யெல்லாம்
பெருங்காதல் களிகூர உருவான சொல்லாலே
பேசுகவி மேக மானுய்!
சீராளு கின்றகவி பாராள வருகம்ப!
செங்கீரை யாடி யருளே!
செழிக்கின்ற கவிமாரி பொழிகின்ற கவிமன்ன
செங்கீரை யாடி யருளே! (2)

1162



14 காரணியும் மைநிறத்துக் காகுத்தன்; அறம்வளர்த்த
கண்ணாளன்; உலகிற் கெல்லாம்
கதியளித்து வளங்காக்கும் கருணைமனத் தயர
காதல்மனக் கோயி லுள்ளான்; [தன்தன்
ஆரணங்கள் ஐயா!வென் றேலமிடும் தனிச்கீர்த்தி
அத்தனையும் தனக்கே யாக்கி,
அமரர்களும் முனிவர்களும் அடிபணிய மறம்
அரக்கரினம் பொருது சாய்த்த [மாற்றி
நாரணன்தன் விளையாட்டை; நற்கவிஞன் வான்மீகி
நவின்றபடி அறிந்து, கான
நாரதன்தன் யாழிசைபோல் நற்றமிழின்
நவிலவரு கம்ப வள்ளால்! [இசைகூட்டி
சீரணியும் சோணாட்டுத் திருவழுந்தூர் வாழ்புலவ!
செங்கீரை யாடி யருளே!
செழிக்கின்ற கவிமாரி பொழிகின்ற கவிமன்ன
செங்கீரை யாடி யருளே! (3)

15 பணிசுமந்த திருநாடு பலசுமந்து வளங்கொழிக்கப்
பருவத்து மாரி யென்னப்
பாவலர்தம் நாசுமந்த பாசுமந்தே அறத்துவழிப்
பாராளும் மன்ன வர்க்குள்
அணிசுமந்த புகழ்சுமந்து, தேவர்களும் அடிபணிய
அன்புருவாய் ஆண்ட கோமான்
ஆட்சியிலே கோசலத்தில் வறுமையின்றி
அளப்பரிய செல்வ மோடு
மணிசுமந்தே இலம்விளங்கமனம்சுமந்தமகிழ்விஞெடு
மாநிதியக் கடலில் மூழ்கி,
மலர்முகத்தில் நகைசுமந்து வாழ்ந்தவகை இந்
மலரவென எண்ணிச் செம்பொன் [நாட்டில்
மணிசுமந்த கலன்களெனப் பொலிகவிதை தருகம்ப!
செங்கீரை யாடி யருளே!
மதிக்கின்ற புலவோர்கள் துதிக்கின்ற தமிழ்வாண!
செங்கீரை யாடி யருளே! (4)

16 வானுடர் தந்தநல் அமுதமாய் வடித்தசொல்
பேசுவாய் குதலை சிந்த,
வண்டாடு மலர்கொண்ட கருமேக வான்குழற்
கற்றையோர் நுதலி லாட,
மானுடு விழிமாதர் கண்ணேறு படுமென
வைத்தவோர் திலக மாங்கே
மதியான திருநுதல் வியர்வையில் வழிந்தோட
மணக்குமுன் மேனி யாட,
தானுடு தண்டைகள் அணிந்தவக் கால்மலர்
தாளமோ டொன்றி யாட,
தமிழ்கோடி எழுதுமோர் கைமலர்கள் ஊன்றியே
தானுடு கின்ற தேவா!
தேனுடு சொல்மலர் நாவாடு கம்பனே!
செங்கீரை யாடி யருளே!
செழிக்கின்ற கவிமாரி பொழிகின்ற கவிமன்ன!
செங்கீரை யாடி யருளே! (5)

17 நிலவுற்ற நெற்றியில் இடமுற்ற சுடரென
நிலைத்தபொற் சுட்டி யாட,
நினைவுற்ற தமிழெனும் நித்திலப் பொன்மகள்
குடிகொண்ட நெஞ்சி லேறி,
கலையுற்ற நிலவென விளங்குபொன் மாலைகள்
கவினுடன் இலங்கி மின்ன,
கவியுற்ற தீந்தமிழ் புவியுற்று வாழ்வுறக்
காகுத்தன் காதை சொல்லி,
மலையுற்ற அருவியாய்க் கவிவந்து பொழிந்திட
மகிழ்வோடு வந்த தேவே!
மலருற்ற தேனென இனிக்கின்ற கவிக்கனி
மற்றதன் சுவையை எல்லாம்
சிலையுற்ற இராகவன் புகழெனச் செப்பிஞய்!
செங்கீரை யாடி யருளே!
செழிக்கின்ற கவிமாரி பொழிகின்ற கவிமன்ன!
செங்கீரை யாடி யருளே! (6)

(வேறு)

(பன்னிரு சீர்ச் சந்த விருத்தம்)

18 கருமுகில் எனவரு குழல்மிசை ஒளிவரு
கதிர்மணி படர்ந்தாட,
கயலென வருவிழி புரள்சிலை படுமதி
முகமது களித்தாட,
ஒருதனி உலகிடை எழுமதி ஒளியுடன்
உலவிடு குழையாட,
உயரற மெனுமழை யதுவிழ எழுபயிர்
உனதுரை தனில்மேவ,
வருபனி எனவரு சிறுவியர் வுனதுடல்
தனிலுடன் வழிந்தோட,
வளர்பிறை எனுநுதல் மிசையினிற் பொலிதரு
சிந்துரம் மணநாற,
தருபகை வெலுதமிழ் மகிழ்வுற வருபவ!
செங்கோ செங்கீரை
தமிழ்வளர் சடையன் கொடைவளர் புலவ!
செங்கோ செங்கீரை. (7)

(வேறு)

(பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்)

19 நெட்டிதழ்த் தாமரை தனைவேத னுற்றதால்
நீள்புவியிற் பீடு கொள்ளும்;
நித்திலம் தனைமங்கை முரலுக் குவமையென்
றேதிட நின்று வாழும்;
பட்டிதழ் வெண்கமலம் தனிலந்தக் கலைமகள்
வாழ்வதாற் பெருமை சேரும்;
படங்கொண்ட பொறியரவம் தனையந்தச் சிவன்
படமெடுத் தாடி நிற்கும்; [கொளப்
மொட்டிதழ் மலருற்ற வேதனை ஈன்றதால்
முளரிக்கோர் பீடு சேரும்;
முத்துமிழும் அலையாழி தனிலந்த மாயனார்
துயில்கொள்ள முதன்மை கொள்ளும்;
கொட்டிதழ்த் தேனென்ற தமிழ்வாழ வைத்தவா!
செங்கீரை யாடி யருளே!
குலமுற்ற கவிஞனாய் நலமுற்ற கம்பனே!
செங்கீரை யாடி யருளே! (8)

20 பொங்கிவரு கின்றகரு முகில்பொழிய விழுந்தமழை
முழங்கிவரை மீதி ருந்து
முத்துக்கள் ஒருகோடி எனத்துளிகள் சிதறஒலி
முழக்கிவீழ் அருவி யாகி,
கங்கையணி சிவன்சடிலத் திருந்துபுனல் பொழிவ
கால்பிரிந் தொன்று சேர்ந்து, [தெனக்
கயல்விழிகள் கொண்டுமலர்த் துகிலணிந்தே
தன்மேனி சார்த்திக் கொண்டு [அகிலாரம்
மங்கிவரு மறியாமைப் புலமுழுதே பயிர்வளரக்
கல்விநீர் பாய்ச்சும் ஆசான்
மாண்பினையொத் தோடிவரும் நதிவளர்ந்து
கோடியென மலர்ந்து நிற்க, [காக்கள்பல
செங்குமுத மிடைவாழும் செய்ச்சடையன் தருபுலவ!
செங்கீரை யாடி யருளே!
செழிக்கின்ற கவிமாரி பொழிகின்ற கவிமன்ன!
செங்கீரை யாடி யருளே! (9)

21 மழையுயரத் திருந்துவிழ, மற்றதன்நீர் நிலம்பாய,
மண்குளிர, உழவ ரெல்லாம்
மனமகிழ்ந்து, கொழுமுகத்தை ஏந்தியதோள்
மண்ணுழுது பண்ப டுத்திக் [வீறுபெற,
குழையிட்ட நிலமதனில் விதைத்திடுநெல் பசும்
கூட்டமெனத் தலையெ டுக்கக் [பாம்புக்
குறுமதியர் போலவிடைச் சிலகளைகள் புகுந்து
காண்உழவர் குறைய கற்றித் [வரக்
தழையவதற் குரமிட்டுத் தாளறுத்துக்கொண்ட பொலி
தனிவருவாய் தருதல் கண்டு;
தனித்ததொரு மருதமெனும் இசைபுகன்று
தரமுயர்ந்த சோழ நாட்டில், [களிப்பேறும்
செழியரெனத் தமிழ்வளர்க்கும் எழில்குலவு தமிழ்க்
செங்கீரை யாடி யருளே! [கம்ப!
செழிக்கின்ற கவிமாரி பொழிகின்ற கவிமன்ன!
செங்கீரை யாடி யருளே! (10)



# 3. தாலப் பருவம்

(வேறு)

22 பங்கப் பழனத் தெழுவாளை
பாயத் தெங்கின் காயுடைந்து
பாயும் புனலோ டெழுகுவளைப்
பைந்தேன் பாயக் கமலமலர்
தங்கும் அன்னப் பார்ப்பினங்கள்
தன்வாய் மடுத்தே உண்டுவக்கத்
தளரும் மடிசார் மேதியினம்
தன்வாய் குதட்டும் கருநீலம்
பொங்கும் செந்தேன் வழிந்தோடிப்
பூவார் கழனித் தடம்பாயப்
பொலியும் சாலி வான்பார்க்கும்
பொன்னித் துறைசேர் வளநாடா!
கங்கைப் பெருக்காய்க் கவிபுனையும்
கம்பா! தாலோ தாலேலோ!
காருத் தன்தன் சீர்பாடும்
கண்ணே! தாலோ தாலேலோ. (1)

23 ஓதும் வேதத் துட்பொருளை,
உணரத் துடிக்கும் மறைமுனிவர்;
உள்ளம் அடக்கித் தன்காலில்
ஒருகால் மடக்கி நிற்பதுபோல்;
மோதும் அலைகள் தம்நடுவண்
முயன்றோர் காலில் நின்று, கயல்
முகத்தைப் பார்க்கும் கொக்கினங்கள்
முன்னின் றொலிக்கும் நீர்த்துறையாய்!
வேதம் ஒலிக்கும் அந்தணர்போல்
விரும்பி ஒலிக்கும் தவளையினம்,
விரைந்து துள்ளக் கயலினங்கள்
விழுந்து புரளும் நாடுடையாய்!
காதல் மணக்கக் கவிபுனையும்
கம்பா! தாலோ தாலேலோ!
காகுத் தன்தன் சீர்பாடும்
கண்ணே! தாலோ தாலேலோ! (2)

24 பொன்னேர் தூக்கிப் பரிதிவரப்
போதும் உழவர் கொழுகிழித்துப்
போடும் சாலின் இடைநடுவில்
புரளும் வெண்மைச் சங்கினங்கள்,
மின்னும் கெண்டை யுடன்தழுவி,
மெல்ல நகர்ந்து கரையேற,
மின்னார் மருங்கும், வெண்ணகையும்,
மேவும் கிரிபோற் பெருந்தனமும்
துள்ளித் திகழும் இளமடவார்
தோளைத் தொட்டே அவைகாட்டித்
தோயும் இன்ப வெள்ளத்தின்
துறையை அறியா திருக்கின்ற
கன்னற் பொன்னி வளநாட்டுக்
கம்பா! தாலோ தாலேலோ
காகுத் தன்தன் சீர்பாடும்
கண்ணே! தாலோ தாலேலோ. (3)

25 குன்றைப் போல்செஞ் சாலிதனைக்
குவித்துப் பசித்தார் முகம்பார்த்துக்
கொடுக்கும் சடையன் கொடைபோலக்
கொட்டும் குடகுப் புனல்வழிந்து
சென்றே ஆருய்க் கால்காலாய்ச்
செல்லக் கொழிக்கும் வளர்காவில்
செழிக்கும் பச்சைப் புல்லுண்டு
சித்தம் மயங்கித் தடுமாறி
நின்றும் புரண்டும் புனலிடையில்
நிமிர்ந்தும் படுத்தும் நீருழக்கி
நிலைக்கா தெழுந்து மாலைவர
நினைந்து பாலை முலைவழியே
கன்றுக் கிரங்கிச் சொரிநாடா!
கம்பா! தாலோ தாலேலோ
காகுத் தன்தன் சீர்பாடும்
கண்ணே! தாலோ தாலேலோ. (4)

26 முத்துப் பவள முழுநிலவை
முழுதும் வெல்லும் முகமடவார்
முல்லைக் காடு விரிந்ததென
மூரல் விரிய நகைவழிய,
கொத்துச் சுமந்த செஞ்சாலி
குவிக்கும் உழவர் முகமலர,
கூனற் பிறைவான் தனில்மேவ,
குழல்மேற் குவளைப் பூவொசிய,
சத்தம் இடுங்காற் சலங்கையுடன்
சாரும் மடவார் தோள்தழுவி,
சால முயங்கி மணிச்செவ்வாய்
சார்ந்த தேனை உண்டு, மனம்
தத்தும் இன்ப வளநாட்டுக்
கம்பா! தாலோ தாலேலோ.
தண்ணார் பொன்னிக் தமிழ்வடிவே
தலைவா! தாலோ தாலேலோ. (5)

(வேறு)

(பன்னிரு சீர்ச் சந்த விருத்தம்)

27 மழைவிழ வருபுனல் தனிலொரு துளிதனை
மலருடல் தனிலேற்று,
மகிழ்வுற வருமது திகழொளி முத்தென
மண்ணினில் வெளியாக,
இழையணி மகளிர்தம் இனியசொல் வருமணி
இதழிடை வெளித்தோன்றும்;
இன்னகை தரவுடன் அரும்பிய பல்லினின்
எழில்தனைக் காணவென,
தழைதரு கமுகினை வென்றவர் கழுத்திடைத்
தனிவொரு மாலையெனத்
தகைவுற எழில்மயில் எனவரு கின்றதோர்
தையலர் நாடுடையாய்!
கழையினை வெல்மொழி கொண்டுல குயர்வுறும்
கம்பா! தாலேலோ
கலைபயில் அரசர்க ளுளமுறை கின்றதோர்
கண்மணி! தாலேலோ. (6)

(வேறு)

(பன்னிரு சீர் ஆசிரிய விருத்தம்)

28 பொங்கும் கமலப் பூவிடையில்
பொலிந்த தேனும், கதிர்ப்பகையின்
புல்லி வடித்த புதுத்தேனும்,
புரண்டு பாய்ந்தே கால்காலாய்
எங்கும் பெருகக் கழனியிடை
இறங்கும் மள்ளர் கால்பின்னி
இடர்ப்பா டுற்றுத் தடுமாற,
எழில்மின் வென்ற இடைமாதர்
தங்கை கொண்டு தழுவியவர்
தடந்தோள் பற்ற, ஒளிமுத்தம்
தான்கண் டங்கு நகைசெய்யும்
தணியாக் காதல் வளநாடா!
தங்கக் கவிக்கோர் தாயாகித்
தாங்கும் கம்பா! தாலேலோ!
தண்ணார் பொன்னித் தனிவடிவே!
தலைவா! தாலோ தாலேலோ! (7)

29 சாரும் மேகம் சூலுடைந்து,
சடையன் கொடைபோல் மழைபெய்யச்
சங்கக் கவிபோல் அதுபெருகிச்
சங்கும் மீனும் இனமணியும்
சேரக் குதித்துக் கதித்தோடி,
செய்வாய் நெற்பெண் தாள்பார்த்துச்
செல்லும் விரைவுக் காற்றுாது
சேல்மீன் புரண்டு சிலிர்த்தோட;
வாரார் கச்சுத் தனமாதர்
வாழைக் கால்கள் தனைத்தழுவி
வளைந்து தவழ்ந்து நெளிந்தோடும்
வளமார் பொன்னி வடிவழகா!
தாரார் தெய்வத் தமிழ்க்கொருசேய்த்
தமிழா! கம்பா! தாலேலோ
தண்ணார் பொன்னித் தமிழ்வடிவே!
தலைவா! தாலோ தாலேலோ. (8)

30 பாம்பும் மதியும் பகைமாற,
படரும் வேணி தனிற்சூடும்
பரமன் அருளுக் குரியமுனி;
பரவை ஏழும் வயிறடக்கித்
தேம்பும் தேவர் துயர்தீர்த்த
தெய்வப் புலமை அகத்தியனார்,
திருக்கைக் கரகத் துள்ளடங்கித்
திகழும் வையம் வாழ்வுபெற,
கூம்பா மலரும் கழனிகளும்
குளிர்ந்து வளரக் கால்வாங்கி,
கோதை மகளிர் உடைநமுவக்
குதிக்கும் பொன்னித் திருநாடா!
காம்பார் பூப்போல் கவிதைதரு
கம்பா! தாலோ தாலேலோ
காகுத் தன்தன் சீர்பாடும்
கண்ணே! தாலோ தாலேலோ. (9)

31 அள்ளற் பழனத் திடைமலரும்
ஆம்பல் நிகர்த்த விழிமாதர்
ஆகம் தழுவு தோள்மள்ளர்
அசையும் அடிக்கீழ்; கயல்மீன்கள்
துள்ளித் திரிய, தங்காதல்
தோகை மடவார் விழியென்று;
தோன்றும் காம மயக்கத்தில்
தோயும் அன்னூர் தனியின்ப
வெள்ளத் தழுந்திச் செயல்மறந்து;
வேளே வெல்தற் கியலாமல்
விளங்கும் காட்சி விளமருத
வேலித் திருநா டுடையவனே!
வள்ளற் சடையன் வாழ்வுதர
வந்தாய்! தாலோ தாலேலோ
வாழும் கவிதைத் தமிழ்கம்ப!
வள்ளால்! தாலே தாலேலோ. (10)

# சப்பாணிப் பருவம்

வேறு

(பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்)

32 கத்துகடல் சூழ்ந்தபுவி இடையெழுந்த மனிதகுலம்
கடலனைய துயரி லாழ்ந்து;
கவிழ்ந்தலையில் சிதைந்தகலம் என்றபடி பலவாறு
கவலுற்று வருந்து போதில்;
முத்திநெறி விளக்கவரு கின்றதனி முதல்வனென
மூவாத வேத நான்கும்,
முழங்குமொரு பீடுடைய கார்மேனித் தனியழகன்
முத்தெறியும் கடலை விட்டு,
பத்தர்மனம் இன்பமுறப்பாம்பணையைத்துறந்திந்தப்
பாருதித்த செம்ம வாகி,
படருமறக் கொடிவளர வில்லெடுத்த பரந்தாமன்
திருவடியைப் பணிந்து, பாவால்
சத்தமிடும் ஆழியலை எனக்கவிதை எழுதியகை
சப்பாணி கொட்டி யருளே!
சடையர்கொடை அளக்கவரு கின்றதமிழ்க் கம்பமுனி
சப்பாணி கொட்டி யருளே! (11)

33 கருதரிய பல்கோடி அண்டங்கள் கடந்தோங்கி
வளர்கின்ற கரிய மாயன்;
கடலோடு மேகங்கள் கருநிலம் மையிவற்றின்
வண்ணங்கள் கண்ட மேனி;
ஒருகோடி எண்ணங்கள் உதிக்கின்ற இதயத்தில்
ஒளிமேரு போல நிற்க,
உயர்கின்ற கோதண்டம் என்கின்ற சிலையேந்தி
உலகங்கள் நீடு வாழ
மருகொண்ட துளவத்தின் மணம்நாற வருகின்ற
இராமனும் மனித தெய்வ
மாண்புரைசெந் தமிழ்க்கவிதை மனங்கனிய
மலர்கவிதை மன்ன ஞகி [உரைசெய்து
தருகொண்டல் எனக்கவிகள் வரைகின்ற கைமலரால்
சப்பாணி கொட்டி யருளே!
தமிழ்தந்த சடகோபர் உளங்கொண்ட கம்பமுனி!
சப்பாணி கொட்டி யருளே! (2)

34 பொங்கரவப் பாயலிடைப் பூமகள்தன் கால்வருடப்
பொருந்துதுயில் கொள்ளுங் காலை
பூவிலயன் முதற்றேவர் தும்புருநா ரதர்முதலாப்
பொருந்தியவண் போற்ற, வாவி
தங்கரவம் தனிலன்று நடனமிடும் சிறுகுழவி
தானாகி வந்த மாயன்;
தாங்கரவம் இளையோனாய்,*சங்காழிதன்னிரண்டு
சோதரராய்த் தானுதிக்க,
அங்கரவம் இட்டகடல் இலங்கைவளர் அரக்கரினம்
அத்தனையும் அழிக்கும் தீயாய்
அவதரித்த காதைதனை ஆன்மாக்கள் [உய்திபெறத்
தேனுடனே அமுதும் சேர்த்து,
சங்கரிதன் வில்லழகை இங்குலகில் எழுதியகை
சப்பாணி கொட்டி யருளே!
சடையர்கொடை அளக்கவரு கின்றதமிழ்க்
சப்பாணி கொட்டி யருளே! [கம்பமுனி!
(3)

* சங்கும் ஆழியும்—பரத சத்துருக்னராய்ப் பிறந்தமை.

35 சம்பரனை அழித்ததய ரதன்மகனை விசுவமுனி
அன்ருெருநாள் சபையில் வந்து
சாருமொரு வேள்விதனைக் காக்கரகு
எனவுரைத்த சால்பு கேட்டுக் [ராமனைத்தா
கும்பமத களிற்றிடையில் அம்புவந்து புகுந்ததென
கொடுந்துயரால் வருந்தி, வாடிக்
குழைவுற்று வருந்துதய ரதனுளத்துக்
குளிர்கவியாற் குவல யத்தோர் [கடுந்துயரைக்
அம்புவியில் இனியமகன் தனைப்பிரியும் தந்தைமனம்
அடைதுயரைக் காண வென்றே
அழகொழுத தமிழ்க்கவிதை பழகிவரு
செய்யுளினுல் ஆக்கி வைத்த [கின்றதனிச்
கம்பமுனி! பொதியமலைக் கும்பமுனி, ஒத்தவன் நீ!
சப்பாணி கொட்டி யருளே!
கவிகோடி வரைகின்ற கைகொண்ட தமிழாளி!
சப்பாணி கொட்டியருளே! (4)

36 விண்ணிருந்து நீங்கியதோர் மின்கொடியு மிப்புவியில்
மேகலையை இடையில் தாங்கி,
விரிகமல மேற்குவளை இரண்டுடனே
வெண்டரளம் ஒளியைக் காட்ட, [பிறைதாங்கி,
பண்ணெழுந்து வந்ததென வருகின்ற பாலமுதை
ஒத்தபசுந் தோகை என்னப்
பஞ்சடிகள் கொண்டவெழிற் சீதையெனும்
விழியாலே பருகிக் காதல் [பேரமுதை
கண்ணளவில் வைத்தரகு ராமனுளத் தெழுவிரகக்
கடுநோயால் வருந்தும் போது
கதிர்சிவன்தன் நுதல்கிழித்த விழியெனவான்
காகுத்தன் மகிழ வென்று [உதித்திட்டான்
தண்ணியசெந் தமிழ்க்கவியால் வரைந்தகர
சப்பாணி கொட்டி யருளே! [மலருடையாய்!
தமிழ்தந்த சடகோபர் உளங்கொண்ட
சப்பாணி கொட்டி யருளே! [கம்பமுனி!
(5)

37 வையகத்தார் எனையிகழ இவ்வுலகில் மாசெனக்குப்
பலவாருய் வந்து சேர,
வளையேந்து கையுடையான் வரலாற்றுத்
உலகத்தே வாழ்வா ரெல்லாம் [தேனமுதை
எய்தவெனச் சீர்கூட்டி இசைசேர்த்து முற்புலவர்
இன்பமுடன் இயம்பி வைத்த
இராகவன்தன் திருச்சரிதம் நான்விரும்பி இசைத்
எனக்கேட்பின் உயர்ந்து தோன்றும் [ததுவேன்
தெய்வநிலை பெற்றகதை மாட்சியுல கறியவென
விருத்தத்தால் இசைத்தே னென்று
தென்றமிழர் வாழ்வுபெற வந்தகவிச் சந்தநிலை
திகழ்கின்ற பாவ லைந்த
கையுடைய கம்பனெனும் பொய்யறியாக் கவிமகன்நீ!
சப்பாணி கொட்டி யருளே!
கவிகோடி வரைகின்ற கைகொண்ட தமிழாளி!
சப்பாணி கொட்டி யருளே! (6)

(வேறு)

(பன்னிருசீர்ச் சந்த விருத்தம்)

38 கங்கையின் இருகரை ஆண்டிடு காவலன்;
கருமுகில் வென்றவனோர்
களிறென வருமுடல் கொண்டவன்; வலிதரு
கார்சிலை தாங்கியவன்;
பொங்கிடு மன்பினில் அன்னையை நிகர்தரு
புண்ணிய வடிவுடையான்;
பூமகள் நாயகன் மேல்வளர் பத்தியில்
பொலிதரு மனமுடையான்;
பங்கமில் நட்பினுக் கொருகுகன் என்றுல
கோதிடு பரிவுடையான்;
படர்சிலை வேடுவ னின்புகழ் புவிமிசை
பலருளம் போற்றுவணம்
கொங்கலர் மலரென வருகவி எழுதுகை
கொட்டுக சப்பாணி!
குளிர்புனற் காவிரித் துறைவளர் கம்பநீ!
கொட்டுக சப்பாணி! (7)

39 கண்டனன் கற்பினுக் கணியினை இலங்கையில்
எனவுரை கழறியவன்;
கடக்கரு மலைபொரு கடல்கடந் தன்னையைக்
கண்டவன் ஆற்றலுளான்;
திண்டிறல் மலைநிகர் புயமலை கொள்சிறு
திருவடி என்றுலகோர்
தினமுரை பகர்தர வலிதனி அனுமனின்
தோள்வலி தீட்டியவா!
வண்டொலி செய்மலர் எழில்தர வருபுனல்
வழங்கிடு காவிரியாள்
வருகதி எனக்கவி வரைகவி மன்னவ!
உனைவழி காட்டியெனக்
கொண்டநற் புலவர்கள் உளமுறை நாயக!
கொட்டுக சப்பாணி!
குளிர்புனற் காவிரித் துறைவளர் கம்பநீ!
கொட்டுக சப்பாணி! (8)

40 தன்னுயிர் புகழ்க்கென விற்றவப் பறவையின்
தனிப்பெருஞ் சரிதையினை,
தாயவள் சீதையை வௌவிய ராவணன்
தனிமுடி சரித்தவனாய்;
மன்னுயிர் பரவிட வருதனித் தலைமகன்
தன்மனை காத்திடவே
மாபெரும் போர்முறை ஆற்றிய காலையில்
மற்றவன் சிறகினையே
தன்னொரு வாள்கொடு வீழ்ந்திட அரிந்தவன்
தாயுடன் தனியேக,
தளர்ந்தவன் வீழ்ந்துயிர் விடுமுனர் இராமனும்
தழுவிட உயர்ந்தவனின்
கன்னலை திகர்சுவைச் சரித்திரம் எழுதுகை
கொட்டுக சப்பாணி!
காவிய மாலைகள் சூடிய கம்பநீ!
கொட்டுக சப்பாணி! (9)

41 நைவளம் எனுமிசை நவின்றிடு பண்பினில்
நடந்துடன் வருஞ்சீதை
நல்லெழில் பொருந்திய கருமுகில் அனையவன்
நகரினில் வரும்போது
கைவளை கழன்றிட ஒருதனி மகிழ்வுடன்
கண்கொடு நோக்கிடவே
கௌசலை தன்மகன் இருவிழி களுமவள்
கண்வலை சிக்கிடவே
மைவளை விழிமலர் அவளுரு மறைத்தவன்
மயங்கிய செய்தியினை
மன்மத வேதனை படுமவள் தன்மையை
வளமார் கவிவடிவில் (முழு)
தைவளம் தருமணி நெல்லெனத் தந்தகை
கொட்டுக சப்பாணி!
தமிழ்நில முழுதொரு கவியினில் அளந்தகை
கொட்டுக சப்பாணி! (10)



# 5. முத்தப் பருவம்

(வேறு)

(பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்)

42 வாளை தாவும் வயல்களிடை
வான்பாய் சாலி முகில்தடவ
வழியும் சாரல் ஆருகி
வரும்போ திடையில் எழுதெங்கின்
பாளை உடைந்து வருந்தேறல்
பாயப் பெருகும் புனல்நீத்தம்
பருகி வளர்ந்த பயிர்களெலாம்
பரதம் ஆடப் புள்ளினங்கள்
காளை முதுகின் மேலேறிக்
காணும் மருத வேலியுறை
கன்னற் பொன்னிக் கவியரசே!
கம்பா! வள்ளல் இராமனது
தாளைப் பாடும் வாய்மலரால்
தலைவா! முத்தம் தந்தருளே!
தண்ணூர் அமுதக் கவிபொழிவாய்த்
தளிரால் முத்தம் தந்தருளே!

43 வானின் றிழிந்து மாபூத
வைப்பாய் விளங்கி வையகத்தில்
வாழும் மக்கள் மனமிருந்து
வளரும் கருணைத் திருவடிவை,
கூனற் பிறையை நெற்றியெனக்
கொண்டாள் பேதைக் குளமுருகி,
கொற்றம் சுமந்த வில்முறித்த
குவவுத் திண்டோள் படைத்தவனை
ஞானம் சுமந்த வேதங்கள்
நாளும் அறியாப் பரம்பொருளை
நன்கு பரவித் துதிபாடி
நலமார் விருத்தக் கவியாக்க,
கானக் குயில்போல் பாடியசீர்க்
கனிவாய் முத்தம் தந்தருளே!
காமர் பொன்னி வளநாட்டுக்
கம்பா! முத்தம் தந்தருளே! (2)

44 அன்னச் சேவல் தாமரைமேல்
அணையக் கிடந்த பெடையன்னம்
அசையப் பூந்தேன் வழிந்தோடி
ஆற்றின் பாங்கர் வண்டலிட,
செந்நெற் சாலி அதில்வளர்ந்து
செழித்துத் தழைந்து வான்பார்க்க,
செல்வம் கொழிக்கும் திணைமருதம்
சேரும் இன்பத் திருநாட்டின்
மன்னர் மதிக்க உயரறங்கள்
மாறு வண்ணம் காக்கவென
மாயோன் எடுத்த அவதார
மாண்பைப் புகலும் இராமகதை
கன்னற் றமிழில் நவின்றிடுவாய்க்
கனியால் முத்தம் தந்தருளே!
காமர் பொன்னி வளநாட்டுக்
கம்பா! முத்தம் தந்தருளே! (3)

45 திங்கள் என்றும் கரியதெனத்
தெரியும் வண்ணம் தூயதெனத்
திகழும் வெண்மை தீற்றியவாய்
தேவன் வாயில் வைத்தூதும்
சங்கை வெல்லும் தவளநிறம்
சார்ந்த மணிகள் பலவாக
சாற்றும் கவிதை யடிபோலச்
சதிரிட் டாடும் இளமாதர்
தங்கள் மேனி எழில்மின்னத்
தானே விரும்பிச் சித்திரங்கள்
தத்தம் கண்ணை இமையாமல்
தங்கி இருக்கும் நகரழகைத்
தங்கக் கவியால் பாடியவாய்த்
தளிரால் முத்தம் தந்தருளே!
தண்ணார் அமுதக் கவிபொழிவாய்த்
தளிரால் முத்தம் தந்தருளே! (4)

46 வண்மை இல்லாக் காரணத்தால்
வறுமைச் சூழல் அறியாத
வாழ்க்கைத் திறத்தை உடையவர்கள்
வாழும் அணிகொள் கோசலத்தில்
திண்மை இல்லை எதிர்த்துவரும்
செறுநர் இல்லாக் காரணத்தால்
தேடும் உண்மை அங்கில்லை
தீய பொய்யும் இன்மையினால்
ஒண்மை இல்லை அங்குற்றார்
ஓங்கும் கேள்வி பெற்றமையால்
என்றே உரைத்துத் தன்மனத்தில்
உயர்ந்த நாட்டின் வளம்விரும்பும்
தண்ணார் கவிதை தந்திடுவாய்த்
தளிரால் முத்தம் தந்தருளே!
தண்ணார் அமுதக் கவிபொழிவாய்த்
தளிரால் முத்தம் தந்தருளே! (5)

47 சீதக் கடல்வாழ் நித்திலமும் —
செழித்த சோலை இடைவளர்ந்து
சிரிக்கும் முல்லை அரும்பினையும்
சேர்த்துச் செய்த வணம்விளங்கி
ஓதக் கடற்கங் கொலிகாட்டி
உவகை தருமோர் குதலைமொழி
உதிர்த்துப் பெற்றோர் மனங்களிக்க
உயிராய் விளங்கும் தமிழ்க்கம்ப!
வேதப் பொருளும் அறியாத
வீரன் புகழைச் சீராக்கி
விளம்பும் ஞானத் தனிவேந்தன்
விளங்கும் குருகூர்ச் சடகோபன்
ஓதும் கவிதை மாலைபெற
உரைவாய் முத்தம் தந்தருளே!
உயிரும் தமிழும் ஒன்றாக்கி
உணர்வாய் முத்தம் தந்தருளே! (6)

48 பத்திக் கடலின் இடைமூழ்கிப்
படமார் அரவில் நடம்பயின்று,
பார்த்தன் மகிழத் தேரோட்டி,
பாவந் தொலைய வருமாயன்
சித்தம் மகிழப் பாசுரங்கள்
செய்யும் ஆழ்வார் பன்னிருவர்
சிந்தைத் தடத்தில் பூத்தெழுந்த
செந்தேன் என்னத் தகுந்தமிழ்மேற்
பித்தம் கொண்டே இராமகதை
பேசி மகிழ்ந்து பேறுற்றுப்
பிரியா இன்பம் தனையெய்திப்
பிறங்கும் இதழ்வாய்க் கடல்கொடுத்த
முத்தம் திகழும் செந்துவர்வாய்
முதல்வா! முத்தம் தந்தருளே!
மூவாத் தமிழ்சொல் கம்பனெனும்
முதல்வா! முத்தம் தந்தருளே! (7)

49 ஞாலம் அளந்த திருவடிகள்
நயந்தோர் ஐவர்க் காகவென
நடந்த தூதின் திறங்கண்டு
நற்றேன் ஒழுகும் தமிழ்மாலை
காலம் முழுதும் நிலைக்கவெனக்
கருதிச் செய்த ஆழ்வார்தம்
கருத்துட் பொருந்தித் திகழ்மாயன்
கடல்சூழ் இலங்கை நகரரக்கர்
சீலம் தவறி மறமிழைக்கச்
சீறி யழித்த ரகுராமன்
சிறப்பைக் கவிதைச் சிமிழடக்கிச்
செகத்திற் களித்த சிறப்புடையாய்!
கோலக் கவிதை நலம்பாடும்
குளிர்வாய் முத்தம் தந்தருளே!
குறையாப் புலமைத் தமிழ்க்கம்ப!
குளிர்வாய் முத்தம் தந்தருளே! (8)

50 கோதை படைத்த தமிழ்கேட்டுக்
குளிரும் அரங்கத் தரவணைமேல்
கோலப் பள்ளி கொண்டருளும்
கோமான் உலகம் காத்தருளும்
ஆதிக் கடவுள் மாமாயன்
அகிலம் அளந்த திருவுடையான்;
அமரர்க் காக மோகினியாய்
அமுதம் தந்த கருணைநிதி
வேத மறிந்த நான்முகனை
விளைக்கும் நாபிக் கமலத்தான்
விளங்கும் அடியை முடிக்கணியாய்
விழைந்து பரவும் சடகோபன்
சீதப் புகழைப் பாடியவாய்ச்
செல்வா! முத்தம் தந்தருளே!
செந்தேன் பொழியும் கவிக்கம்ப!
செவ்வாய் முத்தம் தந்தருளே! (9)

51 வரிவில் ஏந்திக் கைகேயி
வரத்திற் கிசையச் சீதையுடன்
வலிசால் தம்பி பின்ஞக
வனத்திற் கேகும் நிலேகண்டு
திருவே நகர்நீங் கிற்றென்று
தியங்கும் மக்கள் கட்டமெலாம்
தேடற் கரிய திரவியமாம்
தெய்வச் சிலேயார் ரகுவேந்தன்
உரிமைக் குடையான் பின்னேகி
உள்ளம் வருந்திக் கவலேயெனும்
உயர்பே ராழி வீழ்நிலேயை
உணர்த்தும் செஞ்சொற் கவியரசே!
அருமைத் தமிழ்க்கோர் நாயகமே!
அணிவாய் முத்த மளித்தருளே!
அம்பொன் கம்பத் தமிழ்க்குழவி
அணிவாய் முத்த மளித்தருளே! (10)



# 6. வருகைப் பருவம்

(பன்னிரு சீர் ஆசிரிய விருத்தம்)

52 குன்றினை நிகர்த்த தோளிரண்டு
கொண்டு பொருத சம்பரனைக்
கொன்ற வந்நாள் உயிர்காத்த
கோதைக் கீந்த வரமிரண்டால்
நின்றுடன் மறுகித் தயரதனும்
நினைவில் இடங்கொள் கைகேயி
நீள்பொற் றுளின் கீழ்விழுந்து
நெஞ்சில் அமர்ந்த காகுத்தன்
இன்றளிர் மரங்கள் பொலிகானிற்
கேகா வரத்தைத் தந்தருள
இறைஞ்சிக் கிடந்து தடுமாறி
இறந்த நிலையை உளமுருக
ஒன்றிய கவியால் உரைத்துலகில்
உயர்ந்த கம்பா! வருகவே!
உயர்தா மரையை வென்றவடி
வுடையாய் வருக! வருகவே! (1)

53 வந்து முனிவன் எய்துதலும்
வளமார் அமரர் உலகாளும்
வானோர் தலைவன் இந்திரனும்
வந்தான் கடவுள் எனக்கருதிச்
சிந்தை மகிழ்ந்து சிறப்பெய்தச்
செல்வம் கொழித்து வளஞ்சேரச்
செங்கை இரண்டும் சிரங்கூப்பிச்
செகத்தைப் படைத்த முனிமுன்னே
முந்திப் பணிந்த விதம்போல
முன்னர்ப் பணிந்து புகழ்பெற்ற
மூவாப் பெருமைத் தயரதனார்
முதன்மைத் திறத்தை முத்தமிழில்
சந்தக் கவியாய்த் தந்ததமிழ்
சாரும் கம்பா! வருகவே!
சலியாக் கொடைசால் சடையன்வளர்
சால்பே! வருக! வருகவே! (2)

54 தருவார் வனத்துள் யானியற்றும்
தவத்திற் கிடையூ றியற்றரக்கர்
தன்னை அழித்துப் பெருவேள்வி
தடங்கல் இன்றி நிறைவேற
வருவார் அரக்கர் வலியழிக்க
வன்மைச் சிலையார் இராமபிரான்
வனத்திற் கென்னோ டுடனாக
வருதற் கியைவு தரவேண்டும்
பெருமைக் குரியாய்! என்றுமுனி
பேசக் கேட்ட தயரதனும்
பெரும்புண் தனிலே வேல்நுழையப்
பிறக்கும் துன்பம் தனையடையத்
திருவார் வேந்தன் துயர்தமிழில்
தீட்டும் கம்பா! வருகவே!
தென்னன் தமிழ்க்கோர் திருமணியாய்த்
திகழ்வாய்! வருக! வருகவே! (3)

55 மேவுங் கானில், நீர்வளஞ்சூழ்
மிதிலைக் கோமான் கண்டமகள்
மேகம் நிகர்த்த குழல்மாது
மென்சொல் வஞ்சி எழிற்சீதை
பூவின் இதழை வெல்பாதப்
போது பொருந்தி உடன்போதப்
போர்வில் ஏந்திந் போம்தம்பி
புதுமை யழகு பொருந்துவதாய்த்
தாவில் சாலை அமைத்தனைத்
தமிழிற் கவிதை அமுதூறத்
தந்த குழந்தாய்! தமிழ்க்கம்ப!
தன்னேர் இல்லாக் கவியரசே!
பாவிற் கெளியாய்! படர்நிலவே!
பழகும் தமிழாய் வருகவே!
பழனத் துழவர் புகழ்பாடும்
பண்பே வருக! வருகவே! (4)

56 சந்த மலர்த்தண் கற்பகத்தைச்
சார்ந்த நீழற் றலைவற்கும்
சலியா தென்றும் உயிர்களினைச்
சாடிப் பிடிக்கும் தென்றிசையோன்
அந்த கனுக்கும் தம்மனத்தில்
அச்சம் சேர அரசாள்வாய்!
அலைசூழ் இலங்கை தனையாளும்
அரசே! நெடிய மரஞ்சூழும்
இந்தக் கானிற் குன்வருகை
ஏனென் றியம்ப வேண்டுமென
இயம்பி உறுதி பலபகர்ந்தே
இறுதி கண்ட மாரீசன்
முந்தும் தன்மை பாடியசீர்
முதன்மைச் செல்வா! வருகவே!
மூவாக் கவிதைத் தமிழ்க்கம்ப!
முத்தே! வருக! வருகவே! (5)

57 தென்றல் தவழும் சோலையிடைத்
திகழும் மலர்த்தண் பூஞ்செடிகள்
தேனைச் சிந்த மதுமாந்தித்
திரியும் வண்டு குழலூத
மன்றல் கமழும் தாமரைகள்
மணிசேர் விளக்கம் போலாக
மண்டும் புனலில் விழுந்தவலை
மாரு எழினி தானுக
ஒன்றும் மேகத் தொலிகூடி
ஒலிக்கும் முழவாய்த் திகழ்ந்திலக
ஒளிசேர் தோகை நடமாட
உயர்ந்த குவளை அதுநோக்க
என்றும் மருதம் இருந்தவளம்
இயம்பும் கம்பா! வருகவே!
ஏருக் கிங்கோர் எழுபதுபா
இசைத்தாய்! வருக! வருகவே! (6)

58 கட்டும் சுரிகை, சினமீறிக்
கடித்த வாயும் புகையெழும்பக்
கனலும் விழியும் கொண்டவனுய்க்
கங்கைக் குடையான் குகனென்பான்
வெட்டும் மொழியும் அடங்காமல்
விளைந்த சொல்லும் துணையாக்கி
வேக முற்ற மனத்தானுய்
வேடர் குழாங்கள் வீறுகொளக்
கொட்டும் துடியும் ஒலிமுழக்கு
கொம்பும் கொண்டு பரதாழ்வான்
கூட்டும் சேனைப் படையெதிர்க்கும்
கொள்கை தன்னை, இன்பத்தேன்
சொட்டும் கவிதைத் திறந்தவழச்
சொல்லும் கம்பா! வருகவே!
சொல்லுக் கடங்காத் தமிழுலகின்
சொத்தே! வருக! வருகவே! (7)

59 தாயை வனத்திற் சிறைவைத்த
தருக்கன் ஆளும் தனியிலங்கை
தன்னைக் காணக் கடல்தாவித்
தணலில் வேகத் தீயிட்டுப்
பாயும் சிங்கம் எனப்பகைவர்
படையின் ஊடே திறங்காட்டிப்
பண்பின் உருவார் சீதையினைப்
பார்த்துச் செய்தி பலபகர்ந்து
தூயன் சிலைசேர் பகழியெனத்
தோன்றிக் கிளம்பி மீண்டேகித்
தோகை நிலையை அறத்தின்தாய்
துணைக்குச் சொன்ன மாருதியை
நேயத் தமிழிற் பாடியதோர்
நேர்மைக் கம்பா! வருகவே!
நினைவார் நெஞ்சில் தமிழாகி
நிற்பாய்! வருக! வருகவே! (8)

60 கன்றின் ஓசைக் குரல்கேட்டுக்
கறவைக் கூட்டம் மனமகிழ்ந்து
கால்போல் விரைந்தே இலஞ்சேரக்
கண்ட அவைதாம் மடிமுட்டி
நின்று காம்பைச் சுவைத்திழுக்க
நிதமும் பெருகும் பாலோடி
நிறையும் முற்றம் சேருக
நேயப் பெண்டிர் கால்வழுவி
முன்றில் விழக்கண் டேருழவர்
முகிழ்க்கும் நகைதான் சிறிதரும்ப
முல்லை வென்ற நகைமாதர்
முயங்கா தூடும் மருதநிலம்
ஒன்றும் காட்சி ஊருடையாய்!
உயர்ந்த கம்பா! வருகவே!
உயர்தா மரையை வென்றவடி
வுடையாய்! வருக! வருகவே! (9)

61 ஓதப் புணரி இடையெழுங்கார்
உருவ மொத்த மேதியினம்
ஓங்கு செந்தேன் உடன்மல்கி
ஓடும் கழனி இடைமுளைத்த
சீதக் கமலச் செவ்விதழைச்
சேர்த்துக் குதப்ப, வாழன்னம்
சிந்தை குலைந்து பறந்தோடச்
சேற்று நண்டு வளைபுக்குப்
பாதிக் கண்ணால் பார்த்திருக்கப்
பாடும் கிள்ளை இனங்கூடிப்
பச்சை இலைமேற் காட்சிதரப்
பரந்த வளஞ்சால் நாடுடையாய்!
வேதப் பொருளை விளக்கியவோர்
வித்தே! கம்பா! வருகவே!
வெற்றிக் கவிதைத் தமிழ்வேந்தாய்
விளங்கும் பெம்மான்! வருகவே! (10)

Cf 63



# 7. அம்புலிப் பருவம்

(வேறு)

(பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்)

62 எண்ணரிய கடலிடையில் எழுந்துலகை வலமாகி
இதயத்தில் மகிழ்ச்சி செய்வாய்,
இவனுயர்ந்த தமிழ்க்கடலின் இடையெழுந்து
[கவியரசாய்
வலங்கொண்டே இலங்கு கின்றான்;
தண்ணெழில்சேர் மதியுனையே வியந்துவான்
விருப்போடு பாடு கின்றார்; [தமிழ்ப்புலவர்
தமிழுலகில் இவன்மதியைக் கண்டுவந்த புலவ
தண்டமிழாற் போற்று கின்றார்; [ரெலாம்
வண்ணமுற நீவானின் இடையுலவி உலகத்தார்
வாழ்த்துமா றிலங்கு கின்றாய்,
வளர்கவிதை உலகத்தில் இவன்கவிதை
பலபாடி வாழு கின்றான்; [வண்ணங்கள்
அண்ணல்சிவன் பெற்றவிழி ஆதலினால் இவன
அம்புலி! ஆட வாவே! [ழைத்தான்
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே! (1)

63 மன்னுலகில் உனதுருவைப் பெண்முகத்திற்
மதிப்புற்ருய்; அகில மீது [குவமைசொலும்
மரகதப்பொன் வடிவுடையான் மனேவியென
மதிமுகத்தைப் பாடி நின்ருன், [வருசீதை
பொன்னுருவாம் உன்னெளியை அமுதமெனப்
ஓயாது புகழு கின்ருர்; [பூவுலகோர்
புவிமிசையில் இவன்படைத்த பூங்கவியை
புலவரெலாம் புகழு கின்ருர்; [அமுதமெனப்
பன்னரிய விண்மீன்கள் படைதொடர வந்துலகைப்
பார்க்கின்ற தன்மை பெற்ருய்;
பாரிலிவன் புலவர்பலர் பின்தொடர
வருந்தன்மை
படைத்துயர்ந்த பான்மை பெற்ருன்;
அன்னவன்தான் உடனுட மகிழ்ந்திங்கே
அம்புலீ! ஆட வாவே! [உனேயழைத்தான்
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலீ! ஆட வாவே! (2)

64 கலைகளினில் எண்ணிரண்டே உனக்குண்டு
காகுத்தன் காதை சொல்லும் [வையகத்தில்
கம்பனிவன் பெற்றகலை அறுபத்து நான்கென்று
கவிஞரெலாம் சொல்லு கின்றார்;
நிலையின்றித் தேய்ந்துலகில் பின்வளரும் நிலைபெற்று
நிற்கின்றாய்; இவனோ இங்கே
நிலையாய புகழுடனே தேய்வின்றி வளர்கின்ற
நிலைபெற்றே உயரு கின்றான்!
மலைகளென வருமுகிலால் நீமறைக்கப் பட்டொளி
மங்கிடுவாய்; இவனோ என்றும் [தான்
மலையெனவே வரும்புகழின் உச்சிமிசை
மாறாமல் நல்கி நிற்பான்; [நின்றொளிதான்
அலையாமல் நிலையாக ஆடவரும் நினைவிருந்தால்
அம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே! (3)

65 பூமகளை மனமுடைய மாயவனின் இதயமதில்
பொருந்துமொரு தன்மை பெற்ருய்;
பூவுலகில்இவனவனைத் தன்மார்பில் ஏற்றுயர்ந்த
புகழ்பெற்று வாழு கின்ருன்;
ஓமென்ற கடலிலலை உன்வரவு கண்டால்தான்
உலகத்தே மகிழ்வு கொள்ளும்;
உயர்புவியில் மக்களெலாம் இவன்கவிதை
[கேட்டவுடன்
உளம்நிறைந்த உவகை கொள்வார்;
நாமலரும் பாடல்களால் இவனுலகில் உனைச்சிறை
நயந்தடைத்த கார ணத்தால் [யில்
நலிவுற்றுக் குறைமதியாய்த் தளர்வுற்று
நடக்கின்ருய் இவைகளெல்லாம் [வானிடையில்
ஆமென்ருல் உயர்வுற்ருன் இவனழைக்க
அம்புலீ! ஆட வாவே! [மறுத்திடாமல்
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலீ! ஆட வாவே! (4)

66 திமிரமிடு கடலுகுத்த விடமுண்ட சிவன்முடியிற்
செறிவுற்று நிற்ப தாலே
சிந்தனையில் இறுமாப்புச் சேரவிவன்
திறமெண்ணி மகிழ்ந்திடாமல் [தன்னழைப்பின்
அமைதியுடன் செல்லுவதோ இவனந்தக்
அறிதுயில்தான் பொருந்துமாயன்[கடலிடையில்
அடியிரண்டும் முடிகொண்ட மன்னவரும்
அகிலமிசை வாழு கின்றான்; [அதிசயிக்க
அமையாதிங் குன்னொளிதான் அகிலமிசைஒருநாளில்
வாராமல் அணைந்து போகும்;
அன்பனிவன் கவியொளியோ அணையாமல்
அகிலத்தில் பெருமை சேர்க்கும்; [நிதம்பெருகி
அம்மையொரு பாகமுளான் விழியமர்ந்த நாண்மதிநீ
அம்புலீ! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலீ! ஆட வாவே! (5)

67 பண்டுமுதல் இன்றுவரை நின்னுடலில் தக்கனிடு
சாபத்தாற் பரவி நின்று
பரிதவிக்கச் செய்கயநோய் தீர்ந்தினிய மெய்-
பார்வலமாய் வருதல் வேண்டின் [பெற்றுப்
அண்டருல கில்லாத மருத்துவனாய் இவ்வுலகில்
அவதரித்த மருந்து வல்லான்
அகிலத்தில் இவனென்பர் ; அறியாய்நீ தமிழ்க்
சஞ்சீவி அடிக ளெல்லாம் [கவிதைச்
கொண்டுனது நோய்தீர்ப்பான் குறையகன்ற
கோதிலா ஒளிகள் பெற்றுக் [வாழ்வுறலாம்
குவலயத்தில் முழுமதியாய் இறவாத புகழ்
குலவிடலாம் ; ஆதலாலே [பெற்றுக்
அண்டமெலாம் தன்கவியால் அளந்துயர்ந்த
அம்புலீ ! ஆட வாவே ! [புலவனுடன்
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலீ ! ஆட வாவே ! (௦)

68 உரகமொரு நாளிலுனை விழுங்கிடவோர் சாபமுள
தன்மையினை உண்மை யென்றே
உரைத்திடுவார் அக்குறைதான் உனைவிடுத்திங்
உளங்கொள்ளின்ஒன்றுசொல்வேன் [ககலவென
அரவமொரு நாளிலன்று தில்லைமூ வாயிரவர்
அணிதலைமைக் குருக்கள் சேயை
அரிசினத்தால் கடித்திடவும் அவன்மாளக்
தன்கவிதை அடிக ளாலே [கண்டுடனே
வரியரவ விடமாற்றி வைத்தகதை நாடறியும்
வளர்தமிழால் இவனு முன்னை
வாழுதற்கு வைத்திடுவான்; அரவுன்னைத் தீண்
வரங்கொள்வாய்; அந்தச் செய்கை [டாத
அரியதிலை இவனுக்கே ஆதலினுல் வித்தகனே
டம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே! (7)

69 வஞ்சியென வருதமிழிற் கொஞ்சுகவி வளமனைத்தும்
இவன்பாடும் வண்ணம் கேட்டு
வாழ்க்கையினில் நல்லின்பம் வாய்த்திலகி
வானகத்தே உடுக்க ளோடு [மகிழ்ந்திடலாம்;
கொஞ்சிவரும் நீயவன்தன் குளிர்கவியில் நான்மறை
கூறுதிறம் பலவும் கேட்டுக் [கள்
குவலயத்தில் மறையணிந்த முனிவரெனப் பலர்
கொள்கைவரப் பெற்று வாழ்வாய்! [போற்றும்
எஞ்சலிலாக் கடலுன்றால் மகிழுதல்போல் இவன்
இன்கவியால் நீயு வப்பாய் [பாடும்
இவன்கவிதை இருப்பதனுல் நீயுலகில் பலர்
என்றென்றும் நிலைத்து வாழ்வாய்! [போற்ற
அஞ்சாத கவிக்கரசன் ஆனதமிழ்ப் புலவனுடன்
அம்புலீ! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலீ! ஆட வாவே! (8)

70 நெறிகொண்ட உலகத்தில் மேலுற்ற நெடுவானில்
நீயுற்று வாழ வேண்டில்,
நெஞ்சுற்ற கவிமாரி பொழிகின்ற கவிவாணர்
நினைவுற்று வாழ வேண்டில்,
குறிகொண்ட எல்லைக்குள் அடங்காத கடவுளெனக்
குவலயத்தில் வாழ வேண்டில்,
குறையாத நிலவென்னும் கதிர்கொண்டிவ்
குளிர்விக்கும் தன்மை வேண்டில், [வுலகத்தைக்
செறிகின்ற புலமைக்குள் உறைகின்ற இவனோடு
விளையாட உன்னி வாநீ;
செகமளந்த மாயவனைத் தன்கவியுள் அடக்
சினமிறிச் சீறி நின்றே [கியவன்
அறைகின்ற சொற்சாபந் தனையடைதல் மெய்யாகும்
அம்புலி! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலி! ஆட வாவே! (9)

71 பழமறைகள் அறிந்துலகில் தேவரினம் மதிக்கவரு
கின்றதொரு பான்மை பெற்று,
பரமகுரு எனப்புகழ வருவியாழ முனிமனைவி
பரவுபுகழ்த் தாரை என்னும்
அழகிமன வசமாகி உறவுகொளும் நின்னுடைய
வஞ்சனையை அறிந்து கொண்டோர்
அகிலமிசைப் பழிசொல்ல வருமுன்னே இவன
ஆடவர வில்லை யென்றால் [ழைத்தும்
இழவுவரும் உனக்குமிவண் இழிவுவரும், ஆதலினால்
இரக்கமுடன் இயம்பு கின்றேன்
ஏதுமறி யாதவன்போல் நீசென்றால் இவன்
ஏவுமொரு சாபம் சேரும்; [கவிதை
அழகுடைய இராமனெழில் பாடவரு புலவனுடன்
அம்புலீ! ஆட வாவே!
ஆற்றலுள வில்லிகதை சாற்றுகவிக் கம்பனுடன்
அம்புலீ! ஆட வாவே! (10)



---

62, 63, சாமம் 64, 65, 66, பேதம் 67, 68, 69, தானம்
70, 71 தண்டம்

# 8. சிற்றிற் பருவம்

(வேறு)

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

72 தும்பிக் கூட்டம் வெருண்டோடத்
தோன்றும் கல்லாம் தோளுடையான்,
தோகை தன்னைப் பிரியாத
தோன்றற் கிரங்கும் மனமுடையான்,
அம்பிக் கூட்டம் இடைவாழும்
அன்பன்; பரதன் வரக்கண்டே
அண்ணல் இராமன் சார்பாக
அவனை வெல்வேன் எனப்போகிக்
கும்பிட் டவனைத் தொழுதேற்றிக்
கூறும் அன்பு மொழிகேட்டுக்
குழையும் பரதன் பின்வந்த
கொள்கை பாடும் தமிழ்க்கம்ப!
செம்பொத் திருக்கும் சேவடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே! (1)

73 பொய்யே அறியா திருக்கின்ற
புகழுக் குரிய யாமெல்லாம்
பொற்போ டுனக்குக் குற்றேவல்
புரியும் சிந்தை கொண்டுள்ளோம்;
கையிற் பிடித்த சிலையுடையாய்!
காவும் மரமும் புனல்வழியும்
கங்கை உண்டிங் குண்ணமலர்
கனியும் தேனும் மிகவுண்டே;
உய்யும் நிலையை இன்றடைந்தோம்;
உவந்தே ஒருநாள் எம்மூரில்
உறைவாய்! என்னும் குகப்பெருமான்
உள்ளம் உரைத்த கம்பனெனும்
செய்ய புலவா! சீரடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே! (2)

74 உள்ளம் மகிழப் பணிசெய்யும்
உண்மைக் குகனை உடல்தழுவி
உயர்ந்த நெஞ்சாய்! இக்கானம்
உரிதே எனக்கென் றுரைசெய்தாய்
கள்ளம் அறியாய்! என்தம்பி
காலம் எல்லாம் நின்தம்பி
காவிக் கிணைசொல் விழிகொண்ட
கன்னி சீதை நின்கொழுந்தி
வெள்ளக் கங்கை தனையாளும்
வேடர் தலைவ! என்றுரைசெய்
வேந்தன் புகழைப் பாடியவா!
வெள்ளம் தள்ள வந்தொதுங்கும்
தெள்ளும் மணலால் யாமமைத்த
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே! (3)

75 நெறிகள் அமைப்பேன் கானிடையே
நிகழும் நெறிகள் யானறிவேன் ;
நிலைக்கும் கானில் நீயுறையின்
நேடிக் கனிகாய் யான்கொணர்வேன் ;
உறையும் சாலை நினக்கிசைய
உடனே அமைக்கும் திறமுடையேன்
உம்மை என்றும் பிரியாமல்
ஒன்னார் மற்றும் விலங்குகளால்
உறுகண் வருதற் கொவ்வாதேன்
உயிரைக் கொடுத்தே உடன்காப்பேன்
உண்மை எனுமோர் குகனுள்ளம்
உலகம் அறியப் பாடியவா !
செறியும் அழகுச் சீரடியால்
சிறியேம் சிற்றில் சிதையேலே !
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே
சிறியேம் சிற்றில் சிதையேலே ! (4)

76 அன்னுன் குகன்தன் உரைகேளா
தண்ணல் அவனைத் தனிநோக்கி
அன்போ டெந்தைக் கின்றுமுதல்
ஐவர் மக்கள் உன்னுடனே;
மன்னும் பரதன் அவனுள
மற்றிக் கானம் நீயாள்க!
மாரு எந்தை ஆணைவழி
மான்கண் சீதை உடனுக
இன்னே கானம் செல்கின்றேன்
எந்தன் ஆணை இவணிருந்தே
இனிதே யாள்க! என்றுரைத்த
ஏந்தால்! கவிதைக் கோரரசே!
செந்நெற் கழனி நாடுடையாய்!
சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே!
சிறியேஞ் சிற்றில் சிதையேலே! (5)

இராமன் பெருமை இசைத்தவனே!

77 அங்கே மக்கள் சுற்றமினம்
ஆளுங் காவற் குளனும்பி
அச்சந் தருமோர் வனத்துதவி
ஆற்றத் துணையாய் இவனுள்ளான்;
இங்கே வாழும் கிளைகாவல்
இனிதே ஆள்தல் தனைவிடுத்தே
என்னோ டேகின் இவரெல்லாம்
ஏங்கித் தவிப்பர்; ஆதலினால்
பொங்கும் துயரிற் பொருந்தாமல்
புரத்தல் கடனும் என்னுணை
பொருந்தி வாழ்க! எனராமன்
புகலும் மொழிசொல் பெருமானே!
செங்கால் நோக யாமிழைத்த அருளின்றிச்
சிறியேம் சிற்றில் சிதையேலே!
செழிக்கும் கவிதைச் செழுமுகிலே
சிறியேஞ் சிற்றில் சிதையேலே! (6)

78 மேவற் கரிய வனத்தூடே
மிதிலைப் பொன்னாள் சானகிதன்
மென்மைப் பூவார் திருவடிகள்
மெல்ல நடந்து துயரடைய,
தாவா வலிமைத் தனித்தம்பி
தடந்தோள் சுமந்த வில்லுடையான்;
தன்கை அமைத்த சாலையெழில்
தன்னைக் கண்டு காகுத்தன்
யாவை யாதும் இலாதார்க்கே
இையா என்னப் பாராட்டி
இசைத்த சொல்லின் இனிமைநலம்
எழுதும் கம்ப! எம்தலைவ!
தேவர் அமுதம் திகழ்கவியாய்!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
தென்னர் கவிதைத் தேன்கடலே!
சிறியேம் சிற்றில் சிதையேலே! (7)

79 கழுகின் குலத்தைக் காத்துவரும்
கருணை வேந்து, கடுங்கானில்
கயவன் பத்துத் தலையுடையான்,
கன்னி தன்னைக் கவர்ந்தேக
அழுத சீதை துயர்மாற்ற
அரக்கன் உடலம் தூளாக
அடித்துக் கிழிக்கச் சிறகொடிந்தே
அலறி வீழ்ந்தான்! இராமன்வரத்
தொழுது வணங்கிச் செய்திசொலத்
தொடங்கும் நிலையில் உயிர்பிரியத்
துடித்த வள்ளல் நிலைபாடும்
தூய கவிதைத் துறையுடையாய்!
செழுமைத் தமிழ்சொல் எம்கம்ப!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேலார் பொன்னிச் செந்தமிழா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! (8)

80 பொங்கும் ஆழி தோண்டியவர்;
புனிதக் கங்கை வரவழைத்தோர்;
பொல்லா வேங்கை மானினங்கள்
புரிந்து நட்பாய்ச் செய்தவர்கள்;
எங்கும் உள்ளார் போற்றிசெய
எழுந்த குலத்தின் பெருமையினை
என்றும் உயிராய்க் காத்தவர்கள்;
இதயத் தூய்மை உள்ளவர்கள்;
தங்கி வாழ்ந்த குலம்பிறந்தும்
தாரம் கொண்ட பிழையினைத்
தவிர்க்கும் வலிமை இலனென்று
தவித்த இராமன் புகழ்பாடும்
சிங்கக் கவிதைத் தனிவேந்தே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேலார் பொன்னிச் செந்தமிழா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! (9)

81 அமரா பதிக்கு நாயகனும்
அடைந்த துயரை மாற்றவென
அரக்கன் தலைகள் ஐயிரண்டும்
அறுத்த பெம்மான்; தந்தைசொலத்
தமது முடியைத் தனிதுறந்து
தம்பி சீதை தனைத்தொடரத்
தருவார் வனத்திற் குடனேகித்
தாரம் இழந்து தவித்தவராய்க்
குமையும் வள்ளல் துயறுற்றுக்
கொட்டும் சொல்லைத் தீந்தமிழில்
கொடுத்துச் சிறந்த நாவுடையாய்!
குறையா வேதக் கொள்கைதமிழ்ச்
சிமிழில் அடக்கிச் சிறந்தவனே!
சிறியேம் சிற்றில் சிதையேலே!
சேலார் பொன்னிச் செந்தமிழா!
சிறியேம் சிற்றில் சிதையேலே! (10)



# 9. சிறுபறைப் பருவம்

(வேறு)

[பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்]

82 வாய்மையொடு தன்மரபு நிலைகாக்கும் நினைவினொடு
தன்னுயிர் துறந்த வள்ளல்
தன்மைந்தன் எனவந்த பரதனுக்கு முன்தோன்
தருமநிலை நிற்க வென்று [றித்
தீமைபுரி அரக்கரினம் வேரறுப்ப தெனமுடிவு
செய்துசிலை ஏந்து கையால்
தேவியினைப் பிரிந்ததுயர் நனிவருத்தச்
தருமநெறி சிதையு மாறு [செயல்மறந்து
கோமுறைகள் தவறிடவவ் வாலியவன் மார்பூடு
கொடுங்கணையை ஏவ வாலி
கூறியவப் பழியுரைகள் குளிர்தமிழில் வரைந்த
குலத்தரசே! பரவி நின்ற [கவிக்
சேய்மையுறும் உலகமெலாம் சிறந்தபுகழ் பூண்டகவி
சிறுபறை முழக்கி யருளே!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்னநீ!
சிறுபறை முழக்கி யருளே!

83 தம்பியுயிர் கொளத்துணிந்த மதமுடைய ஞுகியவன்
தாரத்தைக் கற்ப ழித்தாய்!
தாரணியில் வேந்துமுறை நன்குணரும்வேந்தநீ
தவருன செயல்கள் செய்தாய்;
எம்பியென என்னையவன் வந்தடைய நண்பானுன்
இன்னலவற் கில்லை யாக்கும்
இயல்புடனிக் கதிர்மகனுக் குலகறிய உதவுகின்ற
இதயத்தால் மறைந்து நின்று
நம்பியெனை வந்தவனும் நலமடைய வேண்டுமென
ஏற்றிப் நாண்வளைத்துப் பகழி தொட்டேன்
நடந்தகதை முடிந்ததிது நடப்பதினி நல
பலவாறு நவின்று நின்ற [மென்று
செம்பதுமத் தடியண்ணல் உளங்கொண்ட திருச்
சிறுபறை முழக்கி யருளே! [செல்வ!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்னநீ
சிறுபறை முழக்கி யருளே! (2)

84 நாடாளு மாசைவர வெனைக்கொல்ல நின்துணையை
நயந்துமிகக் கொண்ட எம்பி,
நலமறியுக் குரக்கினத்தின் செய்கைநிலை
தன்செயலால் நாட்டி விட்டான்; [உலகத்தே
ஏடாளும் புகழுடைய நினதுசிலை தொடுத்தசரம்
என்வலிய மார்பி னூடே
இன்றுநுழை வுற்றசெயல் தனிலதனுல்
கினியவனும் சொந்த மாக [கிட்கிந்தைக்
வீடாளும் அரசெனக்கு விரும்பியவன் தந்ததனுல்
விளம்புமொரு செய்தி கேள்நீ
விரைந்திவனும் தவறுசெயின் ஒருசரத்தால்
விடவையாய் என்று வாலி [இவனுயிரை
சேடாரும் வகைசொன்ன உரைதமிழிற் செப்பியவ!
சிறுபறை முழக்கி யருளே!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்ன நீ
சிறுபறை முழக்கி யருளே! (3)

85 பொங்கரவின் சீற்றமென உயிர்த்துவரு மிளையவனும்
போர்கண்ட வில்லை யூன்றிப்
பொருதுசின முற்றவனாய் நின்றநிலை கண்டுவரு
பூங்கொடியாள் தாரை யோடு
மங்கையரை நோக்காது தரைநோக்கி மாமிகண்ட
மருகன்போல் நின்றான் தன்னின்
மலர்முகத்தை நனிபார்த்தே எம்மில்லம் தனில்
மலரடிகள் பட்ட பேறும் [நின்றன்
இங்கெவர்க்கும் எட்டாத புண்ணியமாம் வானவரும்
எய்தரிய செல்வ முற்றோம்
இங்குனது சினமாற்று படைவீரர் அஞ்சுகிறார்
இனிதருள வேண்டு மென்றே
செங்கரங்கள் கூப்பியவள் செப்பியசொல் இடம்
சிறுபறை முழக்கி யருளே [பியவ!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்ன நீ!
சிறுபறை முழக்கி யருளே! (4)

86 வெய்யபகை அழித்தரசு தந்தவர்கள் உங்களது
வீரமதை உணர்ந்து நிற்பார்
வீறுபெறு வாலிவலி மாயவொரு சரமுதவு
வீரருமக் குதவி வேண்டா
உய்யுவழி பெற்றவர்கள் உமையிகழ்வர் எனில்
உயிரிழந்து போவ ருண்மை; [விரைவில்
உலகுபுகழ் கற்புமயில் சீதையினை நாடிவரும்
உதவியது செய்வர் மெய்யே;
நம்மையுயர் வுறவைத்த நாயகர்தாம் மகிழ்வுபெற
நடத்துசெயல் அறிந்து, தூதர்
நாலுதிசை யுளபடைகள் தமையழைக்கப்
எனநவின்ற தாரை சொல்லைச் [போயினர்கள்
செம்மையுறு தமிழ்மொழியில் நன்மைபெறச்
சிறுபறை முழக்கி யருளே! [செப்பியவ!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்னநீ!
சிறுபறை முழக்கி யருளே (5)

87 போருற்ற வேளையிற் பகைகொண்டு களம்வந்த
பொல்லாத அரக்கர் சேனை;
புகைகொண்ட நெருப்புக்கேஆற்றாத பஞ்செனப்
போயுற்றங் கொழியு மாறு
நேருற்ற இராவணன் மீதெய்த சுடுசரம்
நினைவெலாம் அழித்து, மேலும்
நிலையுற்ற மகுடங்கள் படைவாளி யாவுமே
நிலமீது வீழ வைக்க
வேரற்ற மரமென வலிசாய்ந்து நின்றதை
வென்றதோர் வள்ளல் கண்டு
வீறுற்ற படையுடன் போருக்கு நாளைநீ
விரைவுடன் வருக வென்று
சீருற்ற மொழியினில் சொல்லியசொல் செப்பினாய்!
சிறுபறை முழக்கி யருளே!
செந்தமிழர் செல்வமென வந்தகவி மன்னநீ!
சிறுபறை முழக்கி யருளே! (6)

வேருற்ற அடிமரம் இலையற்று நிற்பதை

(வேறு)

[பன்னிரு சீர்ச் சந்த விருத்தம்]

88 அரிதென வயல்வர் நினைசெயல் முடிதிறம்
அமைந்தவன்; அனுமனெனும்
அன்பர்கள் பணிசெய அமைந்தவன் இராமனின்
ஆணைகள் பெற்றவனாய்,
பொருகடல் தனையுடன் கடந்தொரு வனமதில்
பொருந்திய சீதையினை,
புகழ்பெறக் கண்டவள் தருமணி பெற்றுடன்
புண்ணிய மூர்த்தியினை
விரைவுடன் கண்டவள் துயர்தனை அகற்றிட
விளம்பிய சொல்கேட்டு
வேதனை அகன்றுளம் மகிழ்வது கொள்நிலை
கவியினில் விளம்பியவா!
முருகுடன் வளர்தமிழ் தனையறி புலவநீ!
முழக்குக சிறுபறையே!
முத்தமிழ் வித்தகன் எனவரு கம்பநீ!
முழக்குக சிறுபறையே (7)

89 கண்டனன் கற்பினுக் கணியினை இலங்கையில்
எனவுரை கழறியவன்;
கடுவிட மனையவர் திறல்மிகு மரக்கர்தம்
கடுந்திறல் அடக்கியவன்;
வண்டிமிர் பூவணி சீதையைக் கண்டவள்
வளர்துயர் மாற்றியவன்;
வலியவர் அரக்கர்தம் மன்னவன் எதிரினில்
வார்த்தைக ளாடியவன்;
மண்டிடு சினமிகு மதியிலி அரக்கர்கள்
மனக்கொதிப் புடனேதீ
மற்றவன் வாலினில் வைத்ததை நகரினில்
வைத்தவன் புகழ்பாடித்
தெண்டிரை கொழிகடல் வளர்பவற் கன்பநீ
முழக்குக சிறுபறையே!
தென்றலைத் தன்கவி கொண்டநல் மன்னவ
முழக்குக சிறுபறையே. (8)

90 இத்தரை வளைகடல் கடந்திவண் வந்ததும்
எழிலுறை சீதையெனும்
எம்மனை இருப்பிடம் அறிவுற முயன்றினித்
தேடுதற் கிடமின்றி
அத்தனை இடத்தினு மலைந்தனன் என்துணைக்
கவியினம் அக்கரையில்
அறிந்திடத் துடித்திடும் நிலையினில் அமர்வுற
அன்னையைக் காணுமல்
வித்தகன் திருவடி சேர்ந்தினி என்சொல
விளைவது துன்பமென
விரைந்திவண் உயிர்விடல் நலமெனக் கருதிடும்
வீரனின் அவலநிலை
முத்தமிழ்க் கவியினிற் செப்பிய கம்பநீ!
முழக்குக சிறுபறையே!
முக்கடல் அமுதென நற்கவி தந்தவ!
முழக்குக சிறுபறையே. (9)

91 மேருவை விண்ணினை விரிந்துள உலகினை
வென்றுபி ளந்தோட
வேரினி இலையெனச் சொலுவணம் நூறிடு
விறலுடைச் சிலைசுமந்த
ஆரியன் பகழிகள் வலியன எனுமுரை
அறிந்தும் உரைத்தனையே;
அஞ்சினை ஆதலின் மறைத்தனை உருவினை
ஆதலின் நீபிழைத்தாய்!
வீரமும் பெருமையும் பெற்றவன் என்றுரை
விளம்பிடு நீயந்த
வெல்வலிப் பறவைமுன் நின்றிட வழியிலை
என்றுரை விளம்பிடுநற்
காரிகை மொழியினைக் காவிய மாக்கினை!
முழக்குக சிறுபறையே!
கல்வியிற் பெரியவன் எனவரு கப்பநீ!
முழக்குக சிறுபறையே. (10)

# 10. சிறுதேர்ப் பருவம்

(வேறு)

[பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்]

92 எய்தரிய உலகங்கள் பலவாறு துதிசெய்ய
இருக்கின்ற எனது நாதன்;
இதயத்தில் உருவாகி வளர்கின்ற காதலை
என்னுள்ளம் மகிழு மாறு
பொய்யற்ற மறைபோலும் சொல்கொண்டு செவி
புகன்றெனக்கே உயிரைத் தந்த [குளிரப்
புண்ணியமே! தவப்பயனைப் பூத்துவரும் அறம்
புகலுதற்கோர் வார்த்தை இல்லை [போல்வாய்!
நெய்யுற்ற தீபோல எனையாண்ட துன்பங்கள்
நீங்கிடயான் வாழ்வு பெற்றேன்;
நினக்குரிய கைமாறு செய்யவழி இல்லெனக்கு
நீவாழ்க! என்று வாழ்த்தும்
செய்யவள்தன் உரைபுகன்ற பொய்யறியாக் கவி
சிறுதேர் உருட்டி யருளே! [மகன்நீ
சேலாடும் வயல்கொண்ட தேரழுந்தூர் வாழ்
சிறுதேர் உருட்டி யருளே. [கப்ப! (1)

93 கரியகடல் தனையிந்தச் சிறியவடி வதுகொண்டு
கடந்தெங்ஙன் இங்கு வந்தாய்!
கருதறிய தவப்பலனே! முனிவர்தரு சித்தி
கட்டுரைப்பாய்; என்று சீதை [களோர
அரியசெயல் செய்யனுமன் தனைவினவ அன்னவனும்
அவளடியைத் தொழுது வாழ்த்தி
அஞ்சனையாள் பெற்றவள்நான் அஞ்சனத்தை
தண்ணலடி சிந்தை வைத்தே [ஒத்தநிறத்
பெரியகடல் தாண்டியிவண் உன்னை நனி காணவந்து
பெருமைபல பெற்று விட்டேன்;
பிறவியெனும் கடல்கடந்தேன் பேரின்பம் தனை
எனவுரைசெய் அனும னுக்குந் [யுற்றேன்
திருமகள்தன் வாழ்த்தருளும் திறந்தமிழிற் கூறியநீ
சிறுதேருருட்டி யருளே!
செந்தமிழர் உய்யவென வந்தகவி மன்னநீ
சிறுதேருருட்டி யருளே! (2)

94 விலங்குமனத் தரக்கருறை வெற்பினிடைப் பிரிவு
வேதனையில் உறைந்து வாடும் [தரும்
விலக்கரிய தவமலரை, இறைவியென மறைபேச
இலங்கிவரும் அன்னை தன்னை ;
இலங்கையினில் யான்காணேன் ; இற்பிறப்பும் நற்
இணைந்துவரும் கற்பும் சேர்ந்தே [பொறையும்
எழில்நடந்தான் இடக்கண்டேன் ; உனைப்பிரியா
நடக்குமோர் இளைய வீரன் [துடனுகி
வலங்கொள்ளச் சமைத்தவொரு சாலையிடை
வாழ்கின்ற தன்மை யொத்த [இருந்துதவம்
வனிதையினை நான்கண்டேன் ; வணங்காத
வாழ்வழிக்கும் நெருப்பே என்று [முடியரக்கர்
சிலைநிகரும் தோளனுமன் செப்பியசொல் செப்பியநீ
சிறுதேரு ருட்டி யருளே ;
சேலாடும் வயல்கொண்ட தேரழுந்தூர்வாழ்கம்ப
சிறுதேரு ருட்டி யருளே! (3)

95 மா நகரம் முழுவதிலும் தானெழுந்து பற்றியதீ
மாகுரங்கொன் றிட்ட தன்று
மலரிருந்த தையலினைச் சிறைவைத்தாய் அவள்
மன்னவனுன் கொற்ற மோடு [மனத்தீ
தேனலருஞ் சோலைகளைத் தெய்வநலத் திலங்கை
திசைதோறும் எரித்த தென்றும், [யினைத்
தெய்வமலர்ச் சீதைதவம் நின்தவத்தின்
சீறியே அழித்த தென்றும்; [திறமதனைச்
வானரமொன் றிந்நகரில் வைத்திடும்தீ எனவென்று
நந்திதந்த சாப மென்றும்,
வழங்கிடுசொல் வீடணனை மதியாத இராவண
வாழ்விழந்து போன காதை, [னும்
தேனலர்ந்த சொற்களினுல் தானளந்தே
சிறுதேரு ருட்டி யருளே! [உரைத்தவன்நீ
திருமகளின் உளமுறையும் பெரியகவி
சிறுதேரு ருட்டி யருளே! [மன்னவன்நீ 4

96 பாதகஞ்செய் அரக்கரின முளைத்துவரு கின்றவிவன்
பழுதுபடச் செய்த போதும்,
பார்ப்பதிலை எந்நலங்கள், கேட்பதிலை பிறர்
பலவாறு புகல்வ தென்னை ; [சொற்கள்,
வேதியர்கள் தம்துயரைப் போக்கவென வந்தசெயல்
பொருந்துவதாம் ; அபய மென்று
விளம்பியவர் நலங்காத்தல் எனதுகடன் ;
வேறென்றும் நினைத்த லில்லேன் [இனியவரே
ஆதலால் வீடணன் சொல் அபயமொழி கேட்டவுடன்
அளித்துள்ளேன் அபய தானம்;
அன்புடைய நீரவனை அழையுமெனச் சொல்லி
அடைக்கலப் பெருமை சொல்லும் [யவன்
தீதகன்ற வள்ளல்மொழி செப்பியநற் கவியரச !
சிறுதேரு ருட்டி யருளே !
திருமகளின் உளமுறையும் பெரியகவி மன்னவ நீ
சிறுதேரு ருட்டி யருளே ! (5)

(வேறு)

[பதினான்கு சீர்ச்சந்த விருத்தம்]

97 கருநிற முகிலென வருபடை முனமொரு
கம்பமு டன்பாய்ந்து
கண்விழி பிதுங்கிட அவர்சிரம் அறுத்துடன்
காற்றென வருந்தேரில்
தருவலி படைத்தவைந் தளபதி உயிர்விடத்
தன்வலி காட்டியவன்
தனிச்சிறு குன்றென வளரிரு தோளிணை
கொட்டியே தாவியவன்,
பருவரை நிகர்தரு புடல்மை அரக்கர்கள்
பரிபவ முற்றோட
படுகளத் திந்திர சித்தனின் கொடுங்கணை
பட்டிட அடங்கியவன்
உரைசொல இராவணன் உளச்சினம் உரைத்தவ
உருட்டுக சிறுதேரே!
உலகக் கவிஞர்தம் தலைமைக் குரியவ!
உருட்டுக சிறுதேரே! (6)

(வேறு)

[பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்]

98 அயன்முதலாய் வந்தகுல மதனிடைநீ தோன்றி
அத்தனையும் ஓதியே அறிந்தாய்; [மறை
ஆற்றலுள மன்னவன் நீ தீவினையை நயந்தவல
மாகடலில் வீழ்ந்துமே அமிழ்ந்தாய்;
மயன்செய்த நகரெரியில் வெந்ததென நீகலங்கி
மனக்கவலை பற்பல அடைந்தாய்;
மாசில்பர தாரமதை அஞ்சிறையில் அடைத்த
மாருத காதலால் அடைவேம்; [வளை
தயங்காது பேசுவது மானமிடை பேணுவது
காமமெனச் சொல்லியே திரிவோம்;
தாரணியில் நன்றுநம கொற்றமென நின்று
கும்பனுரை தன்னையும் உலகில் [மொழி
செயங்கொண்ட தமிழாலே தந்துலகை வென்றகவி
சிறுதேரு ருட்டி யருளே!
சேலாடும் வயல்கொண்ட தேரழுந்தூர் வாழ்
சிறுதேரு ருட்டி யருளே! [கம்ப!
(7)

99 பரியமலை எனவுடலைக் கொண்டவலிக் கும்பகன்னன்
நெடுநாளாய்ப் பயிலு றக்கப்
பள்ளிதனை விட்டெழுப்பி விடவெழுந்து வரக்
இராவணனும் பரிந்து நோக்கி, [கண்ட
தருகவெற்றி குரக்கினத்தைத் தானழித்திங் கென
தனிமலைபோல் நின்ற அண்ணன் [வேண்டத்
தகுபெரும்போர் வந்ததுவோ தனிச்சீதை துயர்
தானில்லை யோநம் பீடும் ]மாறத்
வருபுகழும் மாய்ந்ததுவோ எனத்தரும நெறிபேச
மறித்தவனை வைதே உன்றன்
வாய்திறந்து நெறிசொல்ல நீயமைச்சன் தானோ
றவன்கேட்க, வந்த சொல்லைத் [வென்
திருவளரும் செந்தமிழால் தருபுலமைக் கவிமகன்நீ
சிறுதேரு ருட்டி யருளே!
திருமகளின் உளமுறையும் பெரியகவி மன்ன
சிறுதேரு ருட்டி யருளே! [வன்நீ (8)

100 உந்துவிதி என்பிடரைப் பிடித்துந்தக் களம்செல்லும்
உளங்கொண்டேன் ஒன்று சொல்வேன்
காலனுக்கும் அச்சம்வர அன்னவனை ஆடவிட்ட
கடுந்திறமை பெற்ற யானும்
முந்தியந்தக் களத்திடையிற் பொன்றியபின் கயிலை
முயன்றெடுத்த தோளாய்! இந்த [யினை
முயற்சியினைக் கைவிடுக! எனைவென்றார் நினை
முயன்றிட்டால் வெற்றி காண்பார்; [வெல்ல
சந்ததமும் புகழ்கொண்டாய்! எனச் சொல்லிக் கள
தன்னுயிரை ஈந்து நன்றிச் [மேகித்
சரித்திரத்தில் இடம்பெற்ற முன்னேடி கும்பகன்
சரிதத்தைச் சந்த மாக்கிச் [னன்
செந்தமிழில் வரையவென வந்தகவி மன்னவநீ
சிறுதேரு ருட்டி யருளே!
சேலாடும் வயல்கொண்ட தேரழுந்தூர் வாழ்
சிறுதேரு ருட்டி ளருளே. [கம்ப! (9)

(வேறு)

[பன்னிரு சீர்ச் சந்த விருத்தம்]

101 அஞ்சனை பெற்றவன் அரியணை தாங்கிட
அம்புவி எல்லாமும்
அரிதினில் வலம்வரு வாலியின் சேயெனும்
அங்கதன் வாளேந்த
மிஞ்சிய புகழ்க்குறு நாயகன் பரதனும்
வெண்கவி கையேந்த
மென்மனத் திளையவர் இருவரும் நலமுடன்
கவரிகள் மேல்வீச
எஞ்சலில் புகழ்கொடைச் சடையனின் மரபினர்
ஏந்தியே தருமுடியை
எழில்பெரு தவப்புகழ் கொள்குல முனிவரும்
எடுத்துடன் சூட்டியதைச்
செஞ்சொலில் கவிதையெ னத்தரு கம்பநீ
உருட்டுக சிறுதேரே!
செந்தமிழ் உலகினை வெல்கவி மன்னவ!
உருட்டுக சிறுதேரே. (10)

வாழ்க நலம்!

கம்பர் பிள்ளைத் தமிழ் முற்றிற்று.

# KAMBAR PILLAI TAMIZH

(Second Prize)

*MUTHUSAMY SAMBANDHAN,*

Karaikudi, Tamil Nadu.

Born 13—9—1939

---

## நன்றியுரை

இக் கம்பர் பிள்ளைத் தமிழ்க் காப்பியப் பிள்ளைக்கு ஒப்பனை செய்து உருப்பொலியச் செய்த என் உடன்பிறவாத் தமையனார் 'கவியரசு' முடியரசனார் அவர்களுக்குஎன்றென்றும் கடப்பாடுடையேன்.

இப் பிள்ளையின் உள்ளக் கிடக்கையை (ஆங்காங்கே குறிப்புப் பொருள், உள்ளுறை பொருள்களை)ப் புலப்படுத்தி எழுதியுள்ள என் உடன்பிறவா இளைய தமையனார் 'அனிச்ச அடி' நாடகக் காப்பிய ஆசிரியர் 'பாவலர்மணி' புலவர், ஆ. பழநி அவர்களுக்கும் கடப்பாடுடையேன்.

இந் நூலை வெளியிட்டும், பரிசிலளித்துப் பாராட்டும் செய்த பன்னூல் ஆசிரியர் வரகவி, திரு. நாச்சிகுளத்தார் (No 1. Sri Bahari Road, Penang. Malaysia) அவர்களுக்கு என்றும் நன்றியன். பரிசில் தொகையை வழங்கியுள்ள அன்பர் வழக்கறிஞர். திரு. R. இராசசிங்கம் M. P. அவர்களுக்கும் நன்றியுடையேன்,

காரைக்குடி
15—5—78

அன்பன்,
**முத்து. சம்பந்தன்.**

# முன்னுரை

புதுமையின் பெயரால் பொருந்தாக்கவிதைகள் புற்றீசல் போலத் தோன்றி வரும் இற்றை நாளில் 'பண்டைமரபு பழுநிய பாக்கள் கொண்ட இலக்கியம் பாடுக, பரிசிலும் தருகிறோம்' என ஊக்குவித்தோரால் எழுந்ததே இக் கம்பர் பிள்ளைத் தமிழ்க் காப்பியம்.

தமிழுள்ளமும், தமிழ்த் தொண்டும் கொண்ட தக்கார், மலேசியா நாட்டுப் பினங்கு வாழ்தமிழர் உயர்திரு. நாச்சி குளத்தார் அவர்களின் அறிவிப்பே நான் இக் கம்பர் பிள்ளைத்தமிழ் எழுதத் தூண்டுகோலாயிற்று.

தெய்வப் பெயரால் சிற்றிலக்கியங்கள் செய்வது எளிது. ஏனெனில் இருக்கும் புராணங்கள் யாவும் கருத்துச் செறி-வுக்குக் கைகொடுக்கும். சான்றோர் பெயரால் இலக்கியம் சமைத்தல் என்பது மிகவும் அரிது. அஃதும், பல நூற்றாண்டு களுக்கு முன்னர் வாழ்ந்த நம் இலக்கியச் சான்றோர்களைப் பற்றி எழுதுவது என்பது எத்தகைய இடர்ப்பாட்டிற்குரியது என்பது யாவரும் அறிந்த ஒன்று. அன்றியும் நம் சான்றோர் களைப் பற்றிக் கதைகள் உள்ளனவே தவிர உண்மை வரலாறுகள் எங்கே உள்ளன?

இந்நிலையில் கம்பரைப் பற்றிப் 'பிள்ளைத் தமிழ்' இயற்றற்கு அவர்தம் காப்பியத்தைத் தவிர வேறெது துணைநிற்கும்? ஆயினும், அவரைப் பற்றிய மறுக்க முடியாத வரலாற்றுக் குறிப்புக்களும் உள்ளனவே! அவ்வரலாற்றுக் குறிப்புக்களையும், கம்பரின் காப்பியத்தையும் அடிப்படையாகக் கொண்டு இக் 'கம்பர் பிள்ளைத் தமிழ்' இயற்றப்பெற்றுள்ளது.

தெய்வங்கள் பற்றிய பிள்ளைத் தமிழ்க்கும் சான்றோர்கள் பற்றிய பிள்ளைத் தமிழ்க்கும் காப்புப் பருவத்தில் ஒரு புது மரபை உருவாக்கியுள்ளார், திருவாவடுதுறை ஆதீனஅவைப் பெரும்புலவராய் வீற்றிருந்து, தமிழும் சைவமும் தழைத் தினிது ஓங்குமாறு செய்த, திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள்.

தெய்வங்களைப் பற்றிப் பிள்ளை அவர்கள் பாடியருளிய பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் காப்புப் பருவம், பாட்டுடைத் தெய்வத்தைக் காக்குமாறு பிறதெய்வங்களை அழைத்துக் கூறு வதாக அமைந்துள்ளது.

பிள்ளை அவர்கள் சேக்கிழார், அம்பலவாண தேசிகர் ஆகிய இரு சான்றோர்களைப் பற்றிப் பிள்ளைத்தமிழ் பாடியுள் ளார்கள். அவ்விரு இலக்கியங்களிலும் பாட்டுடைச் சான் றோர்களைக் காக்கத தெய்வங்களை அழைத்துக் காக்குமாறு காப்புப் பருவம் அமைத்தாரல்லர்.

'சேக்கிழார் பிள்ளைத்தமிழில்' பெரிய புராணப் பாடல் தொடர்களைக் கொண்டு காப்புப் பருவப் பாக்களை அமைத் துள்ளார்.

'அம்பலவாண தேசிகர் பிள்ளைத் தமிழில்' திருநந்தி தேவர் முதலிய ஞானசாரியர்களையும் சந்தான குரவர்களையும் குறிப்பிட்டுக் காக்குமாறு காப்புப் பருவம் அமைத்துள்ளார். (திருநந்திதேவா முதலாக) 'ஆன்றோர் இலக்கண முகமாகக் காவற் கடவுளாவார் இவரெனத துணிந்து கூறியது' என்ற குறிபபும் உள்ளது. அவ்வாறு பிளளை அவர்கள் பாடி யருளியது ஆராய்தற்குரியது.

தெய்வங்களைப் பற்றிய பிள்ளைத் தமிழில் தெய்வங்களை விளித்துக் காக்குமாறு அமைத்தலும், சான்றோர்களைப் பற் -றிய பிளளைத் தமிழில அவரவர் துறைக்குரிய சான்றோர்களை விளித்துக் காககுமாறு அமைததலும் சால்புடைததென மகாவித்துவான் மீனுடசி சுந்தரம் பிள்ளை அவர்கள் கருதி னர் போலும்.

ஆதலின் பிள்ளை அவர்களின் அடிபோற்றிக் காப்புப் பருவத்தைக் 'கம்பர்க்கு' ஏற்றவாறு, வான்மீகி, தமிழ்இலக் கண இலக்கியச் சான்றோர்கள், நாயன்மார், ஆழ்வா ஆகி யோரைக் குறிப்பிட்டுப் பாடடுடைத்தலைவரைக் காக்குமாறு அமைத்துளளேன்.

இக்கம்பர் பிள்ளைத் தமிழில் பெரும்பாலும் கம்பராமா யணச் சொற்களும், சொறறொடர்களும் — ஏன் — சிற் சில இடங்களில பாடலடிகளும, பாடற்பொருள்களும் அமைக்கப் பெற்றுளளன. இயற்கைப் புனைவுகளாகிய திருவழுந்தூர் வளமும, சோழநாட்டின் வளமும் படிப்பவர்க்கு விருந்தாகும் பான்மையன.

நூல் உங்கள் கையில் இருக்கிறது. உங்களுக்கு உவகை தரின் அதுவே எனக்குப் பெருமை

காரைக்குடி,
15—5—1978

அன்பன்,
முத்து. சம்பந்தன்.

# கம்பர் பிள்ளைத் தமிழ்

## படைப்பு

'கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ்வளர்க்கும்'
நம்பன் கணேசனூர் நற்கழற்கே — கம்பன்மேல்
சாற்றியுள பிள்ளைத் தமிழ்மாலை உள்ளுவந்து
போற்றிப் படைத்தேன் புரிந்து.

முத்து. சம்பந்தன்.

## தமிழ் வணக்கம்

1 தேன்வளர் குறிஞ்சி கான்வளர் முல்லை
தெளிபுலம் நிலையறு பாலை
சீர்வளர் மருதம் திரைவளர் நெய்தல்
திகழ்ந்தொளிர் ஐவகைத் திணையும்
ஈன்றவள், ஆய்புலம் ஊன்றிய மாந்தர்
இருவிழி மணியென இலங்கி
எழில்கொழி தமிழெனும் தொழுதகும் அணங்கின்
இணைசிலம் படிமலர் பணிவாம்;
வான்புகழ் படைத்துத் தானுல களந்த
வண்டமிழ் வளமெலாம் நுகர்ந்து
வடமொழிச் சொல்லைத் தமிழினிற் சேர்க்கும்
வழிமுறை வரன்முறை அமைத்தோன்
ஆன்தரு பாலும் தேன்கனிச் சாறும்
அனையுமி ராமனின் கதையை
அளித்தருள் கம்பன் களித்தெழு மதலைக்
கனிசெயும் தமிழ்க்கவி தழையவே.

நூல்

# 1. காப்புப் பருவம்

வான்மீகி

2 உலகிடை வழங்கிய வடமொழி உணர்ந்ததில்
ஓங்துயர் மதிப டைத்தோன்
ஒப்புயர் வில்லா உறுதவம் புரிந்திட
ஓர்வளர் புற்று றைந்தோன்,
இலகிடும் பொருகணைச் சலதியன் வேடனை
ஏசிய முன்ரெு டர்கொண்(டு)
இராகவன் மாகதை எழுதுவான் மீகியை
இறைஞ்சுதும்; இன்ப மென்றும்
குலவிடும் தமிழிற் குழைவுறு மனத்தினன்
கொஞ்சிடும் மொழிபு கன்று
கோதறு வில்லியின் மீதுறு காதலைக்
குறையா திசைத்த எங்கோ!
நிலவிடும் தோகை நிலையுடற் கண்கள்
நிறைகழை கண்டு மஞ்ஞை
நிமிர்ந்துதன் இனமென மயங்கிடும் ஊரனை
நெடிதிவண் காக்க வென்றே. (1)

---

சலதியன்—வஞ்சகன்; வில்லி—இராமன்;
எம்+கோ; தோகை—சோலை; கண்—கணு;
கழை—கரும்பு.

## அகத்தியர்

(வேறு)

3 அகரமுதல் உயிர்க்கணமும் ககரமுதல் மெய்க்கணமும்
ஆராய்ந் தறிந்து ணர்ந்தோன்
அகத்திணையும் புறத்திணையும் அணிந்தொ ளிருந்
ஆழ்ந்துப யின்று ணர்ந்தோன் [தமிழ்மொழியை
பகரரிய அறிவொளியான் முத்தமிழ்க்கும் இலக்-
பாவார் அகத்தி யத்தைப் [கணமாம்
படைத்தருளிச் செந்தமிழாம் பயிர்வளர்த்த
பராவிப் பணிந்து வப்பாம்; [அகத்தியனைப்
தகவெழின்மெய் நிறைசொல்லில் தழைத்திங்கே
தாயாம் தமிழ்மொ ழிக்குத் [ஓங்கிநிற்கும்
தனையளித்த தனிமகனும் தமிழ்மகனுய்ச்
தானே தனக்கு நிகராய்ப் [சான்றோனுய்த்
புகலரிய யாப்புடைய புகழ்பெற்ற காப்பியத்தைப்
பூரித்தளித்த வள்ளல்
பொங்கிவரு புனற்பொன்னி தங்கிவளர் அழுந்
[தூரின்
புலவனைப் புரக்க வென்றே. (2)

---

பா – நூற்பா

## தொல்காப்பியர்

(வேறு)

4 ஆருயிரி னுருவாகி ஐம்புலனை வளர்க்கின்ற
அன்னைமொழி தமிழ்மொழியை அறிந்த மைந்தன்
அகத்தியற்கு மாணக்க னாகியவன் முதன்மை
[யுற்றே
அரியதொரு பெரும்புலமை பெற்ற செல்வன்,
பேருலகில் தமிழ்மொழியிற் பேசுமிரு வழக்காய்ந்து
பிழையகல எழுத்தொடுசொல் பொருள்பி ரித்துப்
பேறரிய இலக்கணத்தைப் பாரறியத் தந்தவனைப்
பெரும்புகழ்த்தொல் காப்பியனை அஞ்ச லிப்பாம்;
ஏருறவா லிவ்வைய மியங்குமெனும் நன்னினைவால்
இருக்கின்ற நன்செயெலாம் நீர்மை கொள்ளும்
எச்செல்வ மானாலு மச்செல்வம் எல்லாமே
எழுந்தீண்டிக் குவியவரும் பான்மை கொள்ளும்
காருருவுங் கால்வலியாற் கறங்குதலுஞ் சேர்வான்
காலத்திற் பொழிதலிலும் ஒத்தி யங்கும் [பால்
காரோடும் மேதியொடும் சீராடும் அழுந்தூரின்
கவிமன்னன் கம்பனையே புரக்க வென்றே. (3)

---

பேறுஅரிய—பெறுதற்கரிய; (ஈற்றடி முன் ஆறுசீர் மேகம்—மேதி ஒப்புமை) மேகம்:— கார்உரு—கரியஉரு; கால்—காற்று; சேர்+வான்+பால்—சேர்ந்த வானில்; காலம்—பருவகாலம்; மேதி—(எருமை):-கார்உரு—கரிய உரு;கால்—காலாகியஉறுப்பு;சேர்+வான்+பால்—சேரும் நல்லபாலை; காலம்—காலை, மாலை(பொழுது).

## திருவள்ளுவர்

(வேறு)

5 இழுமென் மொழியான் விழுமிய சொற்ற
எழுசீ ரடியன்,
எஃகுண மிக்கோன் தன்னோ டுவமை
இலனோர் வாலறிவன்,
அழுவம் நிகராங் குறளா லகமாம்
அலர்மே லேகியவன்,
ஆழி யறவோன் திருவள் ளுவனின்
அடிகளை ஏத்துதுமே!
குழுமுங் கருங்கார் கொட்டும் மழையால்
குறையாப் பெருவெள்ளம்
குமுறுங் கடல்வாய் கூடுதல் போலக்
கொழுமைக் கடல்வண்ணற்
கொழுதும் முகிலாய்ப் பொழிகவித் துளிகள்
கூடிப் பெருக்கெடுத்துக்
குனிவரி சிலையோன் குணக்கடல் சேரக்
கொடுத்தவற் காத்திடவே. (4)

---

அழுவம் கடல்:
கடல்வண்ணற் கொழுதும்—கடல்வண்ணனைக் குடையும்; சிலையோன் - இராமன் குணம்+கடல்= குணக்கடல்; கொடுத்தவற் காத்திடவே—கொடுத்தவ(கம்ப)னைக் காத்திடவே.

## நக்கீரர்

(வேறு)

6 ஈத்துவக்கும் இன்பத்தால் இசைபெற் ருேங்கும்
இணையில்லாத் தமிழ்க்குலத்தின் காதல் வாழ்வில்
இன்'கொங்கு தேர்வாழ்க்கை' என்னும் [பாட்டால்
ஏற்பட்ட பூசலிலே 'இறையஞரே,
யாத்திருக்கும் பொருள்நுட்ப திட்பம் என்ன?
என்கருதி அமைத்துள்ளீர், இயம்பு வீரே?'
என்றுரைத்தாய், கனல்பறக்க விழித்த போதும்
எதிர்த்தெழுந்த நக்கீர! கழல்ப ணிந்தே
ஏத்தெடுத்தோம்; எம்முயிராந் தமிழ்மொ ழிக்கே
எழுத்துக்கும் சொல்லுக்கும் பொருளி னுக்கும்
இறையாலும் பிழைவருதல் கூடா தென்னும்
எண்ணத்துள் வலிமைபெறத் தமிழை அன்றே
காத்தவன்நீ, ஆதலினெம் விழைவை ஏற்றுக்
கடிகமழும் கொடியாவும் ஓங்கு தெங்கின்
காய்வருடப் புயல்சுமக்கும் அழுந்தூ ராளன்
காப்பியத்தான் கம்பனையுங் காப்பாய் நன்றே (5)

## இளங்கோ அடிகள்

(வேறு)

7 உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்துவர்
ஊழ்வினை உருத்துவந் தூட்டும்
உற்றிநம் அரைசியல் பிழைத்தோர்க் கறமே
ஓர்கூற் றமென உரைத்தோன்
திரையார் பொன்னித் திருமகள் கண்ணகி
சிலம்பொலி செவியுள் அழுந்தச்
சிலையுளம் அழுந்தச் செய்த இளங்கோ
திருவடி எண்ணுவம் போற்றி;
வரையாச் செல்வம் வரையாய் அழுந்தும்
வருவிருந் தோம்புநர் இட்ட
வளவிய உணவு வயிற்றிடை அழுந்த
வன்பசி இடமிலா தழுந்தும்
கரைசார் கனிகளிற் காளைகண் ணழுந்தக்
கனிகண் மண்ணி லழுந்தும்
காட்சியார் அழுந்தூர் மாட்சியான் கம்பனைக்
கண்ணெனக் காத்தருள் கென்றே. (6)

---

சிலையுளம் அழுந்த—கண்ணகியின் உருவம் மனத்தில் பதிய; ('கரை......அழுந்தும்' :-கரைசார் கனிகளில்—கரையிலுள்ள கனிகளில், காளை கண் அழுந்த—காளைகளின் கண்கள் படவே அவற்றை அக்காளைகள் பறிக்க, கனிகள் மண்ணில் அழுந்தும் - அக்கனிகள் மண்ணிற் சிந்தி அழுந்தும் எனவும், கரையில் உள்ள கன்னியர்கள் மீது காளை போன்ற இளைஞர்களின் கண்கள் அழுந்தியதால் அதனைத் தாங்க மாட்டாத அம் மகளிரின் கண்கள் நாணத்தால் தரைநோக்கி அழுந்தும் எனவும் இருபொருள் கொள்க)

## சீத்தலைச் சாத்தனூர்

(வேறு)

8 ஊரலர் தூற்றிய தூற்றலில் ஒன்றையும்
உள்ளங் கொள்ளா உயர்குண மங்கை
உரிமைக் கோவலன் உயிரகன் றதன்பின்
ஒப்பிலள் இல்லற வாழ்வினை; அன்றியும்
தேரறச் செல்வியம் மாதவி தன்மகள்
தெள்ளிய அறிவினள் மணிமே கலையைச்
சேர்த்தனள் துறவில்அச் செய்தியை யாத்த
சீத்தலைச் சாத்தனை ஏத்துதும் நன்றே;
சீரணி வான்முகில் வெண்மை துறக்கச்
செந்நெல் விளைந்து தன்பயிர் துறக்கச்
சேற்றின் முதிர்கழை சாற்றினைத் துறக்கச்
செய்யவள் தன்னைத் தவ்வை துறக்க
நேரல ராஞர் பகையினைத் துறக்க
நேருறு வறிஞரை நிரப்பு துறக்க
நீடிய வளநிறை திருவழுந் தூரின்
நிலைபெறு கம்பனைப் புரந்தருள் கென்றே (7)

---

நிரப்பு — வறுமை; ('சீரணி — நிரப்பு துறக்க' எதிர் நிலைப்பொருளன.)

## திருத்தக்க தேவர்

(வேறு)

9 எவ்வாய் மருங்கு சென்றாலும்
எழில்வாய் மகளிர் மன்றல்கொள்
ஏந்தல் பெருமை இயம்புங்கால்
ஏற்ற சந்தம் இசைத்தவன்காண்,
செவ்வாய் எண்மர் நுகர்ந்ததன்பின்
செய்ய துறவு பூண்டவன்பேர்
சிந்தா மணிசெய் திருத்தக்க
தேவன் தாளைப் போற்றுதுமே;
எவ்வாய் நாவைப் பாமணக்கும்
எடுத்த காவைப் பூமணக்கும்
ஈவோர் கையை மழைமணக்கும்
ஏற்போர் கையைப் பொருள்மணக்கும்
வெவ்வே றெழிற்பா வைநீக்கி
விருத்தப் பாவை மணங்கொண்டு
வென்றி கொள்ளுந் திருவழுந்தூர்
வேந்தன் கம்பற் புரக்கென்றே. (8)

---

வாய் நா - வாயிலுள்ள நா; மணக்கும் - மணங்கொள்ளும் (மணந்து கொள்ளும்); கா—சோலை.

## காப்புப் பருவம்

### சமய குரவர் நால்வர்

(வேறு)

10 ஏடார்மலர் வாடும்மலர் என்றேமனம் எண்ண
இறைவன்மகிழ் செந்தேன்தமி ழிசையாம்மலர்
[மாலே
எடுத்தேயணிவித்தோர்பணி இயற்றுப்புகழ் அப்பர்,
ஏனூர்திரு வாரூருறை ஓர்சுந்தரர், அன்பு
வாடாதொளிர் மணிவாசக வள்ளல்பெரு மானூர்,
வளமார்தமிழ் வலமேவிய பிரமாபுரச் செம்மல்
வரலாற்றெடு மிணேயுஞ்சம யாசாரியர் நால்வர்
மலர்மாணடி மனஞ்சேர்ந்திடத் தொழுவாந்தலே
[தாழ்த்தே
காடார்குழல் மடவாரெலாம் களேகட்டிடும் காலம்
காதார்குழை அளவோடிய கண்ணின்நிழல் கண்டு
கயலாமெனக் கதுவும்மட நாரைக்கணம் நாணக்
காணுங்கயல் நகைகொண்டவண் கழுநீரிடைத்
[துள்ளும்
நாடாவளம் நாளுந்தரும் வேளாண்மையில் ஓங்கும்
நனிவன்கொழு நுனிபாய்ந்துழ அழுந்துந்திரு
[வழுந்தூர்
நாமேவிய பாவாலுயர் நல்லேரெழு பஃதை
நவின்றேயுயர் வளநாடனின் நலங்காத்தருள்
[கென்றே. (9)

---

பிரமாபுரச் செம்மல்-சீகாழித்திருஞான சம்பந்தர்;
ஏரெழுபஃது-ஏரெழுபது என்னும் நூல்.

## சடகோபர்

### (வேறு)

11 ஐந்நிலத்தில் முல்லைநிலம் விரும்ப லன்றி
அழகான குறிஞ்சியிலும் அமர்ந்த மாலை
ஆயிரம்நான் கடுக்கிவரும் பாவாம் பூவில்
அந்தாதித் தொடைசூட்டிக் கூவிக் கூவி
நைந்துருகும் மனத்தானைத் தமிழ்நா வானை
நன்மாறப் பெயரானை நம்மாழ் வானை
நாவலர்பா பண்மருவப் பாடி ஞானை
நற்குருகூர்ச் சடகோபன் தனைத்து திப்பாம்;
மைந்துமிகு புலவரெலாம் வாழ்த்திப் போற்ற
மற்றவர்கள் சீரெடுத்து வணங்கிப் போற்ற
வார்கூந்தல் நப்பின்னை போல வாகி
வான்தமிழிற் பாவிசைத்த சடகோ பன்மேல்
செந்தமிழிற் பேர்பாடி ஊரும் பாடிச்
சீர்பாடி 'அந்தாதி'த் தொடையும் பாடித்
திகழொளிசேர் புகழலங்கல் சூட்டிக் கொண்ட
திருவழுந்தூர்க் கம்பனையே காக்கவென்றே.(10)



---

மாலை-திருமாலை; நா+அலர்+பா; அந்தாதி - சடகோபர் அந்தாதி.

# 2. செங்கீரைப் பருவம்

(வேறு)

12 மெய்வண்ண அறிவுடைய மேலோரான் இவ்வுலகம்
மேன்மேலும் வாழு மெனவே
மேலவர்தங் காப்பியத்துள் உலகமென முதற்
விண்டோதும் ஓது முறையே [சொல்லை
மைவண்ணன் காப்பியத்தும் மங்கலமாம் அச்சொல்லை
வைத்தாள வாய முதமே
வண்ணமொடு பெருகிவர மடித்தவலக் காலின்
மற்றோர்கால் ஏறி யுறவே [மேல்
கைவண்ண ஏடேந்தக் கையாணி கோல்மிடக்
கவிபாடி மகிழு புலவ!
காதுண்ட சிறுகுழையும் மேனின்ற சூழியமும்
கண்டோரை யாட விடவே
செய்வண்ணம் சிறந்தோங்கும் பைவண்ண
செங்கீரை யாடி யருளே! [அழுந்தூர
திருவெண்ணெய் வருசடையன் அருளுள்ளம்
செங்கீரை யாடி யருளே! [உறைகம்ப
(11)

---

செய் — நன்செய்; பை — பசுமை: திருவெண்ணெய் - திருவெண்ணெய் நல்லூர்; சடையன்—சடையப்ப வள்ளல்.

**13** கார்குலவு நிறத்தான்பேர்க் காப்பியத்தைச் செய்த
கற்றோர்கள் ஏம முறவே [பின்பு
காவிரிசூழ் திருவரங்கத் தமையரங்கக் கவின்
கள்ளாரும் பாவி ரியவே [மேடை
சீர்குலவு சடையன்பேர் நூறுகவிக் கொன்றாகச்
சென்றோங்கி ஏற்ற முறவும்
'தெய்வப்பேர்க் காப்பியத்துள் மனிதப்பேர்
சேர்ந்துவரப் பாட்டி சைத்தல் [அடிக்கடியும்
நேர்முறையோ? அன்றன்று; நீக்கிடுக!' என்றாங்கு
நின்றசிலர் கூறி விடவும்
நெறிதவழும் நீர்மையனை அறிவறிந்த வெண்
நிலைத்தோங்கு நேய முறவே [ணெயனை
தேர்வுசெயும் ஆயிரத்தில் ஒருவனெனத் தேர்ந்
செங்கீரை யாடி யருளே! [திசைத்தோய்
திருவெண்ணெய் வருசடையன் அருளுள்ளம்
செங்கீரை யாடி யருளே. [உறைகம்ப
(12)

---

கள் - தேன்

14 துன்னிவரு முகில்வண்ணன் தோன்றியுலா வரும்
தோள்கண்டார் தோளே கண்டார் [போது
தொடுகழல்சேர் தாள்கண்டார் தாளேகண்
துளங்கல்கண் டாரும் அஃதே [டார்,தடக்கைத்
சென்னிமுதல் முழுவடிவைச் சேல்விழியார்
[தம்முள்ளும்
சேர்த்தொன்ருய்க் கண்டார் யாரோ?
செம்பஞ்சுச் சீறடியார் செயல்போலப்
சிந்தித்துத் திளைக்குந் தோறும் [பயில்வோரும்
தொன்றுமுதிர் சொல்கண்டார் சொல்லேகண் டார்
[பொருளின்
தொகைகண்டார் தொகையே கண்டார்
தொகுத்தணி கண்டாரும் அஃதேகண்
சுவைமுழுதும் யாரே கண்டார்? [டாரன்றிச்
தென்தமிழில் நுண்பொருள்கள் பின்னிவரச்
செங்கீரை யாடி யருளே! [செய்தவனே
திருவெண்ணெய் வருசடையன் அருளுள்ளம்
செங்கீரை யாடி யருளே! [உறைகம்ப
(13)

---

துளங்கல் – அசைவு

15 கொடியாடக் கொம்பாடக் கொழுந்தோடு மலர்
கொத்தோடு குலுங்கி யாடக் [பூத்துக்
கோத்தும்பி தேன்ஞிமிறு சுரும்பினங்கள்
கோதியவன் கொங்கி லாட [மகரந்தம்
அடியோடு கழைசாய்த்துப் பிழிசாறு வழிந்தோட
அடுகின்ற புகைவா னேறி
ஆதவனின் கதிரொளியை மறைப்பதுபோ
அடையடையாப் பரந்து லாவ [லணிதிரண்டே
இடியோடு விண்ணூடு கடிதேறி விளையாடும்
எழிலியென அதைம யங்கி
இசைக்குயில்கள் வாய்மூட எழிற்றோகைமயிலாட
எழினியெனத் திரையு மாடச்
செடியாடு மலராடத் தென்றல்வள ரழுந்தூர
செங்கீரை யாடியருளே!
திருவெண்ணெய் வருசடையன் அருளுள்ளம்
செங்கீரை யாடி யருளே. [உறைகம்ப
(14)

---

'கருப்புச் சாற்றைக் காய்ச்ச, அதனால் எழுந்த புகை முகில் போல் தோன்ற அதனைக் கொண்டல் என மயங்கிய குயில் வாய் மூடியிருத்தல் ஏற்புடையதுதான்! ஏனெனில் அது மயங்கும் இயல்பினது. மயக்கம் இல்லாதவனாகிய நீ செங்கீரையாடி யருளாதிருத்தல் ஏன்?' என்பது கருப் பொருளால் தோன்றும் குறிப்பு.

(வேறு)

16 தலைக்கடன் இதுவெனத் தாயுனை ஈன்று
தாங்கிப் புறந்தந்தாள்;
தன்கடன் இதுவெனத் தந்தையும் ஓர்ந்து
சான்றோன் எனச்செய்தான்;
குலக்கொழுந் துனக்குக் கொல்லன் கடனெனக்
கொடுத்தான் எழுத்தாணி;
கொற்றவன் நினக்கு நற்கவி வேந்தெனக்
கொடுத்தான் மணிமுடியே;
நிலைக்கடன் உளதென நேர்ந்தொரு காவியம்
நிறுவிப் பெயர்ந்தாயே!
நீடிய புகழே! நேடிய நட்பே!
நெறியோ டெழுந்துயர்பா
அலைக்கொரு கடலே! கலைக்கொரு நிதியே!
ஆடுக செங்கீரை!
அகிலிடு கொழும்புகை முகில்டும் ஊர
ஆடுக செங்கீரை (15)

---

பா அலைக்கு ஒரு கடல்.

17 புவிபுகழ் தயரதன் பொன்னணி நினக்குப்
புனையவும் வந்தானே!
பொன்செய் தொட்டில் பொருவில் கோசலை
பூட்டவும் வந்தாளே!
சிவிகையும் கொண்டு செய்யவன் பரதன்
சீர்செய வந்தானே!
சிலைதவழ் கையன் செறிகழல் இலக்குவன்
தேர்கொடு வந்தானே!
கவிகையும் கொண்டு சத்துருக் கனனும்
காணிய வந்தானே!
கண்களி கொள்ளக் கனிந்துயர் தமிழ்த்தாய்
காதலின் முன்னுளில்
* அவிசொரிந் தாயிரம் வேட்டபின் வந்தோய்
ஆடுக செங்கீரை!
அகிலிடு கொழும்புகை முகிலிடும் ஊர
ஆடுக செங்கீரை. (16)

---

* வேள்வி செய்து பெற்ற பிள்ளை என்றே தவமிருந்து பெற்றபிள்ளை என்றே கொள்க.

18 மஞ்சனை வண்ணன் வான்பொருள் யாவும்
வழங்கி வந்தோங்க,
மலரணி குழலி அலருரை மங்கை
வாழ்த்த வந்தோங்க,
நெஞ்சுறும் எண்ணம் கொஞ்சுறு மொழியில்
நிரலே நின்றோங்க,
நெறிபடுஞ் சொல்லில் முரிபட லின்றி
நிமிர்ந்து கொண்டாங்கே
பஞ்சிழை கொண்ட செஞ்செவே யாடை
பரந்து சென்றுங்குப்
பாவியல் பயிலும் காவியஞ் செய்து
பன்னரிய பண்பாள!
அஞ்சன வண்ண! செஞ்சொலின் மன்ன!
ஆடுக செங்கீரை!
அகிலிடு கொழும்புகை முகிலிடும் ஊர
ஆடுக செங்கீரை. (17)

---

மஞ்சனை—மஞ்சு அனைய; பன்னரிய-கூறிய.

19 அற்றங் காவாச் சுற்றுடைப் பூந்துகில்
அரையில் நின்ருட,
ஆயிரங் கதிரொளி பாய்ந்தொளி ராழி
அணிவிரல் வந்தாட,
மற்றுங் கோவை மணிபொன் முத்து
மார்பி லசைந்தாட,
மாற்றுயர் பவள மணிவாய் இதழில்
மலர்நகை மின்ருடக்
குற்றங் காணுக் கோதையர் சூழ்ந்து
குரவை பயின்ருடக்
கோனே பொன்னே தேனே முத்தே
என்றே கொண்டாடச்
செற்றஞ் சேரார் சேரமுந் தூர
செங்கோ செங்கீரை!
சீரிய கூரிய தீவிய மொழியாய்
செங்கோ செங்கீரை. (18)

---

தீவிய—இனிய

20 ஐயவி அப்பிய நெய்யணி முச்சி
அசைய அதனோடும்
அணிபிறை போல முப்புரி முத்தணி
அழகிய நுதலாட,
மையணி புருவ மலர்முக நுதலில்
வயங்கிய பொட்டோடு
வான்முழு மதியென வயிரச் சுட்டியும்
வந்து செறிந்தாட,
மெய்யரை ஞாணில் மேவிய மணியொடு
விளங்கிழை வடமாட,
மென்கழல் தண்டை வில்லிடு கிண்கிணி
மிடைந்து கலந்தாடத்
தெய்வப் பாடல் செய்கவி வேந்தே
செங்கோ செங்கீரை!
சீரிய கூரிய தீவிய மொழியாய்
செங்கோ செங்கீரை. (19)

---

வில் - ஒளி

21 கால்படு தூளிக் கணம்படு முன்னங்
கல்லும் கனியாகும்;
கைபடின் முள்ளும் கவினுற விரிந்து
கான்கொள் மலராகும்;
பால்வண அன்னம் பைந்திறக் கிள்ளை
பசுங்கண் மயில்யாவும்
பார்வை படினே பாவைய ராகிப்
பரதம் பயின்றுடும்;
கால்வலி யானை கலைமான் உன்றன்
கண்ணெளி படும்போதே
கன்னிய ராகிக் களிநடம் புரியும்;
கழிபுனல் நிலைதோறும்
செல்விளை யாடும் திருவழுந் தூர
செங்கோ செங்கீரை!
சீரிய சூரிய தீவிய மொழியாய்
செங்கோ செங்கீரை. (20)



---

கனியாகும்—கன்னியாகும்; பால்வண—பால்வண்ண;

# 3. தாலப் பருவம்

(வேறு)

22 தேம்பாய் பலவின் நிழலாடித்
தீரா ஆவல் மேலோங்கத்
திரிந்து திரிந்து புன்மேய்ந்து
திரிந்த மருப்புப் புனிற்றெருமை
தேம்பா மாணுக் கன்நாளும்
தேர்ந்த பாடம் மனத்திருத்தத்
திரும்பத் திரும்பப் பயிலல்போல்
தேமா நிழலில் அசைபோட்டுக்
கூம்பா மலர்சூழ் குளம்படிந்து
குடைந்தே யாட மடிநெரிந்து
கூடும் அமுதம் பெயக்கண்டு
குளிர்நீர் பிரித்துப் பெடையன்னம்
தீம்பால் பருகும் திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ.
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ. (21)

---

'நீரோடு கலந்த பாலைப் பிரித்துத் தனக்கு வேண்டியதை மட்டும் எடுத்துக் கொண்ட அன்னத்தைப்போல, வான்மீகியின் இராமாயணத்தில் தமிழ் மரபுக்கு ஏற்றதை மட்டும் எடுத்துக் கொண்டவன்' என்பது குறிப்புப் பொருள்.

23 நெஞ்சில் இன்பச் சுமையேற
நெடுவா னுச்சி வெயிலேற
நேரும் பசியும் உடனேற
நேரேர் உழவர் வழிநோக்க
அஞ்சல் அஞ்சல் எனச்சிலம்பும்
அணியின் ஒலிகேட் டகமலரும்;
அன்னம் பயில நடைபயின்றே
அருகிற் சென்று முறுவலிக்கும்
மஞ்சள் முகத்து மருதியர்கள்
மணங்கொள் தத்தங் கொழுநர்க்கு
வரையா அன்பை அமுதோடு
மகிழ்ந்தே யூட்டிப் பொழுதெல்லாம்
செஞ்சொல் விளைக்கும் திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ!
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ. (22)

---

மருதியர்—மருதநிலப்பெண்டிர் (உழுதுலமங்கையர்); செஞ்சொல் — செம்மை + சொல்; - செந்நெல், (சொல் என்பதற்குச் சொல் என்றும் நெல் என்றும் இருபொருள் கொள்க.)

24 எய்தும் பொருளை உள்நினைவார்
ஏற்றம் உயர நீரசையும்
எருது பூட்ட நேரசையும்
இணையும் ஏரின் நிரையசையும்
செய்யும் செயலில் சீரசையும்
செறிந்த எருவின் தளையசையும்
செம்மை சான்ற அடிபதியும்
சேந்து நீரின் தொடைபொலியும்
மொய்கொள் புலத்தைப் பண்படுத்தி
முளைத்துத் தோன்றும் களைகட்டி
முறுகி வளரும் பயன்கண்டு
முழுமை பெற்ற மனத்தோடு
செய்யுள் விளைக்கும் திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ!
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ. (23)

---

தொடைபொலியும் —கட்டுதல் (தேக்குதல்) சிறக்கும்- எதுகை மோனைத் தொடைகள் விளங்கும்; புலம்—நிலம்;- அறிவு; களைகட்டி - களை நீக்கி;பிழைநீக்கி; செய்யுள் - நிலத்துள் ;— பா (செய்யுள் என்பதற்கு நிலத்துள் என்றும் பா என்றும் இரு பொருள் கொள்க.)

25 கொழிக்கும் முத்து நகைமாதர்
கொண்ட பணியைத் தலைக்கொண்டு
குரலைக் குறிலா அமைவித்துக்
கொடுவாய்க் கதிர்வாள் கூன்பிறையைப்
பழிக்கும் நுதலிற் பதிந்தொளிரும்
பருவப் புருவ வில்கோட்டிப்
பாய்கண் அம்பை எய்தெய்து
பறிக்கும் களையோ டுயிர்பறிக்க
விழித்து நோக்கும் அவர்கொழுநர்
விடுமூச் சாங்கு நெடிலாக
வினையில் கையை இடையூன்றி
வெஃகிச் செய்யும் வேளாண்மை
செழித்துச் சிறக்கும் திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ!
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ. (24)

---

வேளாண்மை – பயிர்த்தொழில்;- வேள் + ஆண்மை— காமன் செய்கை. (வேளாண்மை என்பதற்கு இருபொருள் கொள்க.)

26 புட்டில் சுமந்த கோதண்டன்
புக்க காலை மிதிலைவளர்
பூவை கண்ட காட்சியினைப்
பொன்னி அவற்காண் மாட்சியினைச்
சுட்டிச் சொல்ல மனங்கொண்டோ
சொல்லும் பொருளும் அணிசேர்த்துச்
சொரிவான் வேண்டி விரலமுதைத்
துவர்வாய் வைத்தே ஆராய்ந்து
தொட்டிற் கிடந்து மேன்முகட்டைத்
துணைப்பூ விழியால் பார்த்திருந்து
தோலா நாவால் இசைகூட்டிச்
சுவைத்தே னமுதப் பாடல்தரத்
திட்டஞ் செய்தாய்! திருவழுந்தூர்ச்
செல்வா தாலே தாலேலோ!
தெய்வத் தமிழ்த்தாய் ஈன்றுமகிழ்
சேயே தாலே தாலேலோ. (25)

---

துவர் — பவளம்

(வேறு)

27 எண்ணில் எழுத்தில் தன்னிற் சிறந்தோன்
இருத்தல் கண்டொருவன்
இன்னுந் தன்னை அவற்கும் மேலா
இலங்க முயல்வான் போல்
வண்ணந் தீன்ற வெண்ணித் திலத்தின்
வண்ணங் கண்டன்னம்
மறு,தன் வண்ணம் என்றே நாணி
மணிநீர் குடைந்தாடி
வெண்ணித் திலத்தின் குவைமே னின்றிள
வெயிலின் கதிராடி
விரித்த சிறகின் ஈரம் புலர்த்தி
வெண்மை மெருகேற்றும்
தண்ணந் துறைசேர் திருவழுந் தூர
தாலே தாலேலோ!
தண்டமிழ்ப் பொழிலில் தழைகவிக் குயிலே
தாலே தாலேலோ. (26)

---

வன்+நந்து—வளமான நத்தை;
மறு—களங்கம் (தன் வண்ணம் மறு என மாற்றிப் பொருள் கொள்க)'நித்திலத்தின் வெண்மை கண்டு நாணிய அன்னம் மணிநீர் குடைந்தாடியும், வெயிலில் ஈரம் புலர்த்தியும் நித்திலத்திற்கு நிகராக விளங்கவேண்டும் என எண்ணிறற்-போல், நினைக்க நிகராக விளங்கவேண்டும என்று புலவர்கள் முயன்றும் வெற்றி பெறவில்லை' என்பது குறிப்புப் பொருள்.

28 தெண்டிரை இலங்கைக் கண்டியின் மன்னன்
சீயப் பரராசன்
தேடா வறுமை நீடிய தாலே
தேம்பும் நாட்டார்கள்
கொண்டிடும் பசியின் கொடுமையைப் போக்கக்
கொள்ளான் வழியேதும்,
கொழிதமிழ்ப் புலவர் [1]நாவாய் மொழியாற்
குறித்தான் திருமுகமே!
நண்பொடும் அதனைக் கண்ணுற் றதுமே
[2]நாவாய் நாவாயா
நல்லுயிர் ஓம்பும் உலைக்குறு பொருளந்
நாளே ஈந்தானோர்
தண்ணளி வெண்ணெய்க் கண்ணனின் நண்ப
தாலே தாலேலோ!
தண்டமிழ்ப் பொழிலில் தழைகவிக் குயிலே
தாலே தாலேலோ. (27)

---

1 நா + வாய் + மொழி. 2 நாவாய்—கப்பல்; வெண்ணெய்—திருவெண்ணெய் நல்லூர்; கண்ணன்—சடையப்ப வள்ளலின் பெயர்களுள் ஒன்று.

29 பொற்சங் கெடுத்துப் பாலைப் புகட்டின்
புந்தி வளராதாம்,
புத்தொளி வெள்ளிச் சங்கால் புகட்டின்
வித்தை பொலியாதாம்,
செற்றம் இலராய் மற்றவர் செப்பத்
திருப்பாற் கடல்மூழ்கித்
திருமால் கையில் திகழும் சங்கைச்
சேர்த்தார் கொடுவந்தே!
முற்றிய அன்பால் பெற்றவள் நாளும்
முப்பால் முகந்தூட்ட
முன்னிமை சொக்கப் பொன்வளர் தொட்டில்
முத்தே கண்வளராய்!
சற்றுங் குறையாத் தகைசால் புலவ
தாலே தாலேலோ!
சங்கத் தமிழின் துங்கக் கவிஞ
தாலே தாலேலோ. (28)

30 நீரிற் சங்கம் உறங்க மேதி
நிழலிற் படிந்துறங்கும்,
நேர்தார் வண்டும் உறங்கச் செய்யாள்
நெடுந்தா மரையுறங்கும்,
தூரில் ஆமை உறங்கச் சிப்பி
துறையிற் றுதைந்துறங்கும்,
தோன்றும் போரில் அன்னம் உறங்கத்
தோகை பொழிலுறங்கும்,
ஊரில் யாரும் உறங்க உறங்கா
துன்னிமை போராடல்
உனக்கிது முறையோ புனக்கிளி யனையாய்?
உயிரே கண்வளராய்?
தாரில் ஊறும் வேரிக் கவியே
தாலே தாலேலோ!
சங்கத் தமிழின் துங்கக் கவிஞ
தாலே தாலேலோ. (29)

---

தார்—பூ; போர் — வைக்கோற்போர்; தோகை — மயில்;
வேரி—தேன்.

31 முன்னை நல்வினை முதிர்பய னுல்வரு
முத்தே சீராளா!
முற்றிய வேள்வியின் நற்றவக் கொழுந்தே
மூவாப் பேராளா!
தொன்மை சேர்தமிழ் வன்மை மேவிய
தோலா நாவோயே!
துறைபெறு விருத்தம் உறைபெறு கவிக்கோர்
தோன்ற லானுயே!
நன்னர் மேவிய கீர்த்தியி னுயக
நாட்பூ வாயோனே!
நண்ணிய பொருளே! புண்ணிய நின்னை
நாடார் யாரிங்கே?
தன்னிக ரில்லாத் தண்டமிழ்ப் புலவ
தாலே தாலேலோ!
சங்கத் தமிழின் துங்கக் கவிஞ
தாலே தாலேலோ. (30)



---

நாட்பூ—நாளிற் பூத்த பூ (அன்றலர்ந்த மலர்),
பூவாயோன்—பூப்போன்ற வாயினன்.

# 4. சப்பாணிப் பருவம்

(வேறு)

32 சேறீன்ற தாமரைகள் தேனீன்று வண்டுக்குச்
சிந்தாமல் விருந்து வைக்கும்,
செழிப்பான பொழில்யாவும் பூவீன்று வருகின்ற
தென்றற்கு விருந்து வைக்கும்,
ஆறீன்ற தன்நீரை அருகீன்று வயற்கெல்லாம்
அமுதாக்கி விருந்து வைக்கும்,
அவ்வயலும் வளமீன்றே ஆங்குவளர்
அளவின்றி விருந்து வைக்கும் [உயிர்க்கெல்லாம்
நாறீன்ற நெற்பயிர்கள் நூறீன்று நட்டார்க்கு
நன்ருக விருந்து வைக்கும்,
நயனீன்ற சாறெல்லாம் பயனீன்று கண்ணுக்கு
நாடோறும் விருந்து வைக்கும்,
தாறீன்ற வாழையெலாம் அணிலூட்டும் அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்சடலைக்
சப்பாணி கொட்டி யருளே. [குடைந்தவனே
(31)

---

ஆறு+ஈன்ற+தன்+நீரை; ஈண்டு-நெருங்கு; நாறு-நாற்று; நட்டார் - நடவு செய்தார், (நட்புற்ருர்) சாறு - விழா. 'அழுந்தூரில் உள்ள இயற்கைப் பொருள்களெல்லாம் தம்மிடமுள்ள பொருளை வழங்கி விருந்து வைக்கும் இயல்பு உடையவாய் இருப்ப, நீ மட்டும் சப்பாணி கொட்டி, என் கண்ணிற்கும் செவிக்கும் விருந்து வைக்காதிருத்தல் ஏனே?' என்பது குறிப்புப் பொருள்.

33 சேர்ந்தொளிருந் தாதுகுக்கும் சோலைதொறும்,
செறிந்திருக்கும் காடு தோறும், [சண்பகமும்
தேமலரின் போதவிழும் பொய்கைதொறும்,
[வெள்ளியெனத்
திகழ்மணலின் தடங்கள் தோறும்,
வார்ந்தொளிரும் மாதவியின் வேலிகொண்டு
வளர்பூக வனங்கள் தோறும், [வானோங்கி
வயல்தோறும், வளர்தெங்கு செவ்வாழை
வளர்கின்ற வனங்கள் தோறும், [பூந்தாழை
தீர்ந்தறியாக் கால்பலவா ஊர்ந்தேறி யூர்தோறும்
சென்றூட்டிச் சென்ற போதும்
சேர்ந்தவுடல் பலவற்றின் உள்ளிருந்தும் ஓயாத
தேயாத உயிர்கள் போலச்
சார்ந்துவரு புனற்பொன்னி யூர்ந்துவரும் அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்க்கடலைக்
சப்பாணி கொட்டி யருளே. [குடைந்தவனே
(32)

---

பூகம்—கமுகு. 'காடு தொறும், தடங்கள் தொறும். வனங்கள் தொறும் கால்பலவாகப் பிரிந்து சென்றாலும் ஓயாது தேயாது ஓடும் காவிரிபோல எத்தனைபேர் எடுத்தெடுத்து மொழியினும் புதுப்புதுக் கருத்துக்கள் தேயாமல் ஓயாமல் வளர்ந்த வண்ணம் இருப்பது நின் காவியம்' என்பது குறிப்புப் பொருள்

34 [1]சிலம்புகளே பரலாகச் சிலம்புகின்ற சிலம்போடு
செறிகழலும் சேர்ந்த தாளாள்,
சினமில்லாக் காலத்தும் செந்தீயைக் கொடு
சிந்துமிரு தீய கண்ணுள், [நஞ்சைச்
புலம்புறவே புறந்திரிவாள் புல்லுயிரும் வல்லுயிரும்
பொக்கெனவே பற்றி யுண்பாள்,
பொருந்தியுள வரைகளையே கழங்காக்கி
பொழுதுகழி யாட லுடையாள் [விளையாடிப்
சலவுருவாள் தாடகையாள் சரமொன்ருல் துளைபட்டுச்
சாயுமுடல் பொழிகு ருதியால்
தனிவண்ணச் செவ்வானம் தரைமீது
சாய்ந்தாளி ஞேசை கேட்டுச் [நனிகாணச்
சலம்புணராக் கொள்கையவர் சார்கின்ற அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்கடலைக்
சப்பாணி கொட்டி யருளே. [குடைந்தவனே
(33)

---

புலம்புற—தனியாக; சலம் உருவாள் – பாவத்தின் உருவினள்.
1மலைகளைப் பரல்கற்களாகக் கொண்டு ஒலிக்கும் சிலப்பு.

35 நஞ்சனைய நெஞ்சினராம் மாரீசன் சுவாகென்பார்
நாடற்ற வாழ்க்கை பெற்றும்
நாகவிழி நாகநடை நாகமன தோளினராய்
நண்ணியவர் தலைமை ஏற்க
வஞ்சனையும் பொய்வினையும் வரைவின்றி
வாளரக்கர் கூட்டம் ஈண்டி [வளர்ந்துள்ள
வாய்த்துள்ள மன்னுயிர்க்கும் மாதவர்க்கும்
மறவாமல் செய்து நிற்கக் [கொடுமைகளை
கஞ்சமலர் நயனத்தான் கைவாளிக் கஞ்சியவன்
கடலுள்மா ரீசன் போகக்
கடிவாளிக் கிரையாகி மண்வீழும் சுவாகாங்குக்
கதறுமொலி செவியி லேறத்
தஞ்சமென வருவோரை யஞ்சலெனும் அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்கடலைக்
சப்பாணி கொட்டி யருளே! [குடைந்தவனே
(34)

---

நாகம் - 1 பாம்பு 2 யானை 3 மலை; அன - அன்ன.

36 கன்னிமயில் அனப்பேடை கள்ளிருக்கும்
காவிக்கண் மிதிலைப் பொன்னி [மலர்க்கூந்தல்
கார்வந்து களைப்பாறிக் காலுந்த மேலுந்தும்
கடிமதில்கொள் கன்னி மாடம்
ஒன்றியவள் ஓடியகண் நிலைகுத்தக் கரியவனின்
ஒண்கண்ணை உண்க ணுண்ண
உரியவனும் கண்கொண்டான் உணர்வொன்ற
மற்றொருவர் புகுந்து கொண்டார்; [ஒருவரகம்
மன்னவையிற் சனகன்வை கார்முகத்தை மழை
வளைக்கக்கைக் கொண்ட போது [வண்ணன்
வைத்தவிழி வாங்காமல் கண்டிருக்க அஃதிற்ற
வானிடியின் ஓசை கேட்டுத்
தன்வளத்தில் தனக்குநிகர் தானேயாம் அழுந்தூர
சப்பாணி கொட்டி யருளே!
தமிழென்னும் அளப்பரிய இமிழ்கடலைக்
சப்பாணி கொட்டி யருளே. [குடைந்தவனே
(35)

---

கார்முகம் – வில்.

(வேறு)

37 நீதியின் வழியில் நிற்போர்க் கின்னல்
நேரினும் நிலையாதே!
நெறிமுறை தவறும் குருடர்க் கழிவும்
நேர்ந்திடும் விலகாதே!
ஓதியும் உணர்ந்தும் உணர்வழி நின்றோர்
உரைபொருள் வளங்காட்டி,
ஒப்புர வாற்றி உயர்பதம் பெற்ற
உரவோர் செயல்காட்டி,
ஊதியங் கருதா தூழியம் செய்யும்
உத்தமர் உருக்காட்டி,
உயர்செஞ் சோற்றுக் கடனுக் குயிரை
உதவினர் திறஞ்சொன்னாய்!
கோதிலர் குணத்தர் கூடமுந் தூர
கொட்டுக சப்பாணி!
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி (36)

38 காரணி வண்ணன் பேரணி காட்டிக்
கற்பனை நயஞ்செறியக்
காண்பவ ருள்ளம் மாண்புற எழுதும்
கைவல ஓவியனே!
பேரறி வாளன் உலகம வாவிய
பெற்றியன் திருவேபோற்
பெருகூ ருணியும், பெருந்தகை யாளன்
பெற்றிடும் செல்வம்போல்
ஊரணி கொண்ட மருந்துநன் மரமும்,
ஒப்பில் நயனுடையான்
உற்றிடுஞ் செல்வம் போன்ருெளிர் கின்ற
உள்ளூர்ப் பழுமரமும்,
கூரறி வாளரும் கூடமுந் தூர
கொட்டுக சப்பாணி!
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி. (37)

---

பேரணி - பேரழகு.

39 உட்புகை நெஞ்சர் உயிர்க்குல முண்ணும்
ஒழியா இயல்பாளர்
உருவில் வலியர் அருளி லரக்கர்
ஒவ்வாக் குலவேரைக்
கட்டொடும் அறுத்துப் பட்டிடச் செய்யும்
காலங் கைகூடக்
கட்டமை வரிவிற் கார்முகிற் காளை
கான்செல வித்திட்ட
ஒட்டகப் புறத்தைப் புறங்கொள் புறமே
ஒன்றும் மந்தரையாள்
ஒல்லா வாயொடும் பொல்லா நகையொடும்
உலவு தலைக்கண்டு
கொட்புறும் அளி,மலர் கூடமுந் தூர
கொட்டுக சப்பாணி!
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி. (38)

---

கொட்புறும் - சுழலும்.

40 தண்டக வனத்துறை தனியவன் அரக்கனுய்த்
தான்திரி வன்கண்ணன்,
தாவர சங்கமம் யாவையும் வாரித்
தானுணும் தறுகண்ணன்,
மண்டலம் விண்டலம் எதிருநர் அழித்தவன்
மாதவள் சீதையினை
வவ்விட, வள்ளலின் வதைபட் டுதைபட
மண்ணுழை விராதன்முன்
கொண்டதன் நிலையுணர்ந் தறிவொளி கூடிடக்
கோதைவிற் குரிசில்பாற்
குழைவுறு மனத்தொடு குறைவறத் துதித்துக்
கூறிடும் மொழிகேட்டுக்
குண்டுநீ ரிலஞ்சி கூடழுந் தூர
கொட்டுக சப்பாணி!
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி. (39)

---

மண் + தலம்; விண் + தலம்;
வள்ளலின்- இராமனால்; மண் + நுழை.

41 உருகிய செம்பொனும் ஓடும் ஒன்றென
உன்னும் ஒண்மதியும்
ஒன்றிய புலன்கள் ஓரைந் தடக்கும்
உரனும் உடையார்போல்
பருகிடு நீரில் வதிவுறும் ஆமைப்
பாரிய முதுகின்மேல்
பல்பொறி அலவன் நல்லுற வாடிப்
படிந்து விளையாட
அருகுசென் றதனைக் கதுவிடும் எண்ணம்
அறவே இலதாகி
அதனலம் பெருகக் கரைமருங் கிருந்தே
ஆசி யுரைநல்கிக்
குருகுகண் குளிரும் திருவழுந் தூர
கொட்டுக சப்பாணி!
கொழுவிய காவியம் எழுதிய கைகொடு
கொட்டுக சப்பாணி. (40)



---

'ஆமையின் முதுகில் அலவன் ஏறிவிளையாட அதனைக் கண் குளிரக் கண்டு குருகு களித்தாற் போல, வேறுபாடுற்று நின்ற சைவத்தையும் வைணவத்தையும் உறவாடி விளையாட விட்டுச் சமயக் கணக்கர்களையே கண்குளிர வைத்தவன்' என்பது குறிப்புப் பொருள்.

## 5. முத்தப் பருவம்

(வேறு)

42 புகலும் வாழ்த்து வணக்கமொடு
பொருந்து பொருளும் செறிகுவதாய்ப்
புகழும் நான்கு பொருள்பயக்கும்
புதுமை நடையும் உடைத்தாகி
நிகரில் தலைவன் றனைக்கொண்டு
நிலைக்கும் மலையுங் கடல்நாடும்
நிறுவு நகரும் பொழுதுமிரு
நெடிய சுடரின் தோற்றமொடும்
தகவின் புனைந்து மணம்புணர்த்துத்
தாதார் பொழிலும் புனலாட்டும்
சாற்றி எட்டுச் சுவைகூட்டித்
தக்கார் தருபொன் முடிசூட்டித்
திகழும் பெருங்காப் பியமுரைத்த
செவ்வாய் முத்தம் தருகவே!
செந்நெற் பழனத் தழுந்தூரின்
செல்வா முத்தம் தருகவே. (41)

---

பொழுது -பெரும் பொழுது, சிறுபொழுது. இருநெடிய சுடர் -ஞாயிறு, திங்கள். (ஆட்டும் என்பதைப் பொழிலொடுங் கூட்டுக)

43 எண்ணற் றெழுந்த சொற்சுவையும்
இணையற் றெழுந்த பொருட்சுவையும்
இணையுற் றெழுந்த அணிச்சுவையும்
இணைப்புற் றெழுந்த கவிச்சுவையும்
கண்ணுற் ருளிரும் அரங்கேற்றக்
கனிவுற் ருர்கண் நீர்பனிப்பக்
காதுற் ருர்மெய்ம் மயிர்பொடிப்பக்
கையுற் ருர்செய்ம் முழக்கொலிபோய்
விண்ணுற் றதிர வியப்போங்க
விரிந்து பரந்த கடலன்ன
விளையும் நயங்கள் எடுத்தோதி
வினவற் கியைந்த விடைநல்கித்
தெண்மை திகழ மொழிமொழியும்
செவ்வாய் முத்தம் தருகவே!
செந்நெல் பழனத் தழுந்தூரின்
செல்வா முத்தம் தருகவே. (42)

---

தெண்மை – தெளிவு.

44 வன்சங் கீன்ற பருமுத்தும்
வட்கிக் கடலுட் போய்ப்பதிய
வால்வெண் ணிறத்தி னெருமுத்தும்
வண்மைக் கரும்புட் போய்ப்பதிய,
நன்முத் தொன்று நாணுற்று
நன்செய்ச் சாலிக் குட்பதிய,
நயங்கொள் அரிய முத்தொன்று
நாணி வேய்க்குட் போய்ப்பதியத்
துன்புற் றொடுங்கி ஒருமுத்தும்
தும்பிக் கொம்புட் போய்ப்பதியச்
சூல்கொள் மேகத் தொருமுத்தும்
தோன்ற லின்றி யுட்பதியத்
தென்சொல் முத்து விளைவிக்கும்
செவ்வாய் முத்தம் தருகவே!
செந்நெற் பழனத் தழுந்தூரின்
செல்வா முத்தம் தருகவே. (43)

---

வட்கி—வெட்கி; தும்பி—யானை.

45 கஞ்சம் மலர்ந்து கரைதாவிக்
காணும் இஞ்சி முத்தமிடும்,
கண்ணுற் றெழுந்த அவ்விஞ்சி
கடிகொள் மஞ்சள் முத்தமிடும்,
மஞ்சள் செழித்து வளர்ந்தோங்கி
வரிநெற் கதிரை முத்தமிடும்,
வரம்பை மேவி அக்கதிரும்
வளர்ந்த கருப்பை முத்தமிடும்,
எஞ்ச வில்லா இன்கரும்பும்
எழுந்தே கமுகை முத்தமிடும்,
எழுந்த கமுகும் இளநீரை
இனிதே முத்த, அத்தெங்கு
செஞ்ச முகிலை முத்தமிடும்,
செல்வா முத்தம் தருகவே!
செந்நெற் பழனத் தழுந்தூர
செவ்வாய் முத்தம் தருகவே. (44)

---

செஞ்ச – நேராக.

46 தூக்கின் அரிய இசைபயின்று
சோலை மாவின் துளிரயின்று
துணையோ டுறைந்து கருவுற்றுத்
துயரற் றீனுங் காலத்துக்
காக்கைக் கூட்டைக் கண்டுவந்து
கருதிக் குயிலும் முட்டையிடக்
காக்கை அதனை அடைகாத்துக்
கருத்தோ டிருந்து பார்ப்பெடுத்து
மூக்கில் இரையைக் கொடுவந்து
முன்னந் தனது பார்ப்போடு
முளையாச் சிறகுக் குயிற்பார்ப்பை
முனைப்புற் றூட்டி வளர்த்திருந்து
காக்கும் அழுந்தூர்க் கவிச்செல்வா
கனிவாய் முத்தம் தருகவே!
கன்னித் தமிழில் வடகதைசொல்
கனிவாய் முத்தம் தருகவே. (45)

---

'குயிலின் முட்டையைக் காக்கை அடைகாத்துப் பார்ப்பாக்கி இரையூட்டி வளர்த்துக் காத்தாற் போல, வடமொழிக் கதையாகிய இராமாயணத்தை மனத்திலேற்றுத் தமிழில் இராமகாதையாகப் பாடித் தமிழ் மரபெனும் இரையூட்டி வளர்த்தவன்' என்பது குறிப்பாற் பெறப்படும்.

(வேறு)

47 தளவம் புரையெம் தவள எயிற்றின்
தகைமைக் குடைந்த, கடலின்
தரங்கந் தருவெண் டரளமும் கொள்ளேம்;
ததர்கொள் மலர்கள் அணியெம்
அளகஞ் செறிந்த அருநிற மஞ்சி
அலைவு மிகுந்த முகிலும்
அளிக்கும் பனிவெண் டரளமும் வெஃகேம்;
அணிகொள் டணைத்தோட் குடைந்து
குளகக் கவியின் வளர்[1]கழை முத்தைக்
குறியேம்; இனிக்கு மெஞ்சொற்
கொளுநற் சுவையிற் குடை[2]கழை முத்தைக்
குறித்திங் கெதுவும் புகலேம்;
களபந் திகழும் மணிதிகழ் மார்பா
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே. (46)

---

தளவம்—முல்லை; தவளம்—வெண்மை; ததர்—கொத்து; கழை—1. மூங்கில், 2. கரும்பு.

48 கொண்டல் முழங்கிக் குவிக்கும் முத்தும்,
குறுங்கண் கழையீன் முத்தும்,
குளிர்வெண் டணிலம் குவிக்கும் முத்தும்,
கொழுந்தா மரையின் முத்தும்,
வண்டல் வயல்நெற் கதிரீன் முத்தும்,
வளர்வேய் வெடித்தீன் முத்தும்,
வழையி னடியில், கதலித் தூரில்,
வரம்பில், குரம்பில், சாலில்,
கண்டல் அடிக்குள் வதிந்தே நந்து
கருதி இடுநன் முத்தும்,
களமர் சிறுவர் முகந்து வந்து
கடைமுன் பரப்புங் காட்சி
கண்டின் புறுங்கற் கண்டின் மொழியோய்
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே. (47)

---

கடை – வாயில்.

49 மங்கை கழுத்தின் வடிவைப் பழித்து
வளர்ந்தே உயர்ந்த கமுகு
வடிகுலைப் பசுங்காய், வளமை மஞ்சள்
வண்ணம் அடைந்தி ராமன்
அங்கை, அகல்கண், அடிகள், உரிய
அளவின் அமைந்த இதழ்கள்
அமைவுறச் சிவந்து திகழ்தல் அனைய
அழகின் பழுத்துப் பொலியத்
தங்கும் கிளிகள் தமக்குக் கோவை
தருநற் கனியென் றெண்ணித்
தலையுறும் அலகாற் கதுவக் காய்போல்
தலைகள் தயங்குங் காட்சி
கங்கி லிருந்து கண்டு வியப்போய்
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே. (48)

---

தயங்கும்—அசையும்; கங்கு—வயல் வரம்பு.
'கிளிகள் கமுகின் பழத்தைக் கோவைக் கனியெனக் கருதிக் கதுவ, கோவை அன்மையை அறிந்து. ஆசையழிந்து ஏமாந்தாற்போல, முத்தம் தருவாய் என்ற என் நம்பிக்கை அழிந்து நான் ஏமாறுதவாறு முத்தம்தருக!' என்பது குறிப்புப் பொருள்.

'கிளியின் ஏமாற்றம் கண்டு வியந்தவன் நீ. என் ஏமாற்றத்தையும் கண்டு வியக்க விரும்பாதே!' என்பதும் குறிப்பால் கொள்ளக்கிடக்கின்றது.

(பழத்தைப் பற்ற முனையும் கிளிகளின் தலைகள் பாக்குக்காய் போல் காட்சியளிக்கின்றன.)

50 நாமுறு கடலை ஆடையி னுடீஇய
நனிமிகு தொன்மை உலகில்
நால்வகை நிலத்தின் பால்வகை நிறீஇய
நலமெழு நம்முன் அறிவர்
ஆமுறு செழுநா அசைவுற எழீஇய
அழகுறும் செம்மைத் தமிழில்
ஆகிடும் கடல்நூற் பாகினை அளைஇய
அறிவினர் பின்னோர் சுவைக்க
ஏமுறு மனத்தொ டியற்றினர் தரீஇய
இலக்கண இலக்கியம் அயின்றோர்
யாம்பெறு இன்பம் யாவரும் பெறீஇய
ரெனச்சொலும் தமிழின் மரபைக்
காமுறு புலவ தோமறு மொழியோய்
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே, (49)

---

நாம் – அச்சம்; ஆம் – அழகு.

51 முன்னைப் பழைமைக் கொருமுதுப் பழைமை
முதிரும் முதன்மைப் பொருளாய்,
மொழியும் புதுமைக் கொளிதரு புதுமை
முகிழ்க்கும் மும்மைத் தமிழாய்த்
தென்றற் பொதியில் திகழ்வான் மதியாய்த்
திருமால் வடபாற் குன்றம்
தெற்கில் குமரி ஆயிடைத் திகழ்ந்து
செங்கோ லாட்சி சிறந்த
மன்னர் மூவர் மடிவளர் மகளாய்
மறையோர் இறையோர் எவரும்
மடிதற் றெழுந்து பணிசெய மகிழ்ந்து
மகவொரு நான்கு மீன்ற
கன்னித் தமிழின் இன்சொற் கிள்ளாய்
கனிவாய் முத்தம் அருளே!
கமுகின் கன்னல் வளரமுந் தூர
கனிவாய் முத்தம் அருளே. (50)



மகவொரு நான்கு — கன்னடம், தெலுங்கு, மலையாளம், துளு என்னும் நான்கு மொழிப் பிள்ளைகள்

# 6. வருகைப் பருவம்

(வேறு)

52 நாமந் தருபேர் மலையிழிந்து
நாஞு வகைய மணியோடும்
நத்தும் பொன்னின் துகளோடும்
நடன மயிலின் பீலியொடும்
வாமக் களிற்றுக் கொம்போடும்
வயிரக் கள்ளி அகிலோடும்
மணத்தின் மிக்க சந்தோடும்
மலரின் தாதுத் தேனேடும்
ஏமந் தருநற் பொருளின்னும்
யாவை உளவோ அவைவாரி
ஏம்பல் மிக்க வணிகர்போல்
ஏதம் நீக்கிப் பரந்துவரும்
காமர் பொன்னி சூழழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே. (51)

---

நாமம் – அச்சம்; சந்து – சந்தனம்; ஏம்பல் – ஆரவாரம்.

53 வளருஞ் செந்நெற் பயிர்பேணி
வளைந்த கதிரின் நிலையுணர்ந்து
வரிப்பல் குயத்தா லரிந்தெடுத்து
வயலின் களத்திற் கட்டடித்தார்
அளவின் மேரு நெற்குன்றம்
அமைய, அரியைப் போரிட்டார்
அதனைப் பரப்பிக் கடாவிட்டே
அடையும் நெல்லில் ஒருபங்கை
உளமும் மகிழ இரவலர்க்கும்
உடனிந் துவந்தார் பொதியேற்றி
உருக்கொள் பண்டி மனைசெலுத்தி
உழுதுண் வாழ்வே உயர்வென்னும்
களமர் குழுமும் திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே. (52)

---

அரி—வைக்கோல்; பண்டி - வண்டி.
'களமர்கள் இரவலர்க்கு ஈந்துவக்கும் அழுந் தூரில் தோன்றிய நீ, நான் இரந்து நிற்பதறிந்தும் வாராதிருக்கலாமோ?' என்பது குறிப்புப் பொருள்.

54 நாட்கொள் போது நிறைகூந்தல்
நறவும் நாணும் இன்றீஞ்சொல்
நவ்விக் கண்ணின் மருதியர்தாம்
நடந்து செல்லும் நடையழகை
வேட்புற் றன்னம் பின்றிரிய
விரிந்த நளினப் பள்ளியிடை
மேவி வளரும் இளம்பிள்ளை,
மேயும் மேதி கன்றுள்ளிக்
கோட்பின் விளித்துச் சோர்பாலைக்
குளிர்நீர் நீக்கிப் பருகியதும்
கூடும் அரிய துயில்கொள்ளக்
குலவும் தேரை தாலாட்டும்
காட்சி வளரும் திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியுங் கவிபாடும்
கம்ப நாடா வருகவே. (53)

---

கோட்பு—வலிமை.

55 புயலைத் தாக்கிப் பொருதெங்கு,
புறக்காழ் பொதியுங் கரும்போந்தை
பொருந்து பாளை அரிந்துவிடப்
பொங்கிக் கலயம் வழிதேனும்,
துயலுங் கொம்பிற் கனித்தேனும்,
தூங்கு தாற்றின் கனித்தேனும்,
தொடையி னிழியு மிருல்தேனும்,
துலங்கும் ஆலைக் கழைத்தேனும்
மயங்கிச் சேர்ந்து வரம்போட
வாளை கெண்டை கயல்கெளிறு
வராஅல் உளுவை மண்டுகம்
வாய்வைத் தருந்திக் களிதூங்கும்
கயங்கள் வயங்கு திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியுங் கவிபாடும்
கம்ப நாடா வருகவே. (54)

---

போந்தை — பனை.
திருவழுந்தூரில் பெருகி வரும் பல்வகைத் தேனும் உண்ட வாளை முதலியன களித்துக் கிடந்தாற்போல, உன் வருகையால் தான் களிக்கவேண்டும் என்பது கவியின் உட்கிடக்கை.

56 குளிர்வெண் பணிலம் உலவிவரக்
குவியும் முத்து வரம்பெல்லாம்,
கோவைக் கனியி னீட்டத்தாற்
கூரும் பவளம் பரம்பெல்லாம்,
நளிர்கொள் நீரிற் கலந்துவந்து
நண்ணும் செம்பொன் குரம்பெல்லாம்,
நற்பால் வண்ணச் சிறகன்னம்
நாடுஞ் சாலிப் பரப்பெல்லாம்,
துளிர்கள் தழைய மலர்தழையச்
சோரும் செந்தேன் கரம்பெல்லாம்,
தோகை ஓகை கொண்டாடத்
தூங்க லோசை காவெல்லாம்
களிவண் டீண்டும் திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே. (55)

---

தூங்கலோசைக் களிவண்டு காவெல்லாம் ஈண்டும் என மாற்றிப் பொருள் கொள்க.

57 தெளிக்கும் தோகை நிரந்திருக்க
நின்ற தெங்கின் அரிபாளை
நிறைக்கும் நறவைப் பதனறிந்து
நேடி இறக்கி நெய்யரியால்
புளிக்கும் முன்னர் வடிகட்டிப்
புதிய தெளிவைப் பனைதந்த
பொருந்து பசிய குடைநிறையப்
புரிந்தே யூற்றி உழையாளர்க்
களிக்க அவரும் அதைப்பருகி
அகமும் முகமும் மலர்ந்தொளிர
அதனைக் கண்டு தாம்பருகி
அளவ ளாவித் தம்மகமும்
களிக்குங் களமர் வாழுழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கள்ளின் சொல்லாற் கவியளித்த
கம்ப நாடா வருகவே. (56)

---

பசிய - பசுமையான; உழையாளர் — சூழ்ந்திருப்பவர்.
'களமர் பாளையின் நறவைப் பதனறிந்து இறக்கினாற்போல் நீ சங்க இலக்கியத்திலிருந்தும், குறள் முதலியவற்றிலிருந்தும் கருத்துக்களை இறக்கினாய் என்பதும், பசிய குடையில் ஊற்றிக் கொடுத்தாற்போல விருத்தப்பா எனும் குடையில் ஊற்றித் தந்தாய் என்பதும், அருகிலிருந்து பருகியோர் களித்து மகிழ்ந்தாற்போல நின் காவியத்தேறலை மாந்திக் களித்தனர் என்பதும், அவர் மகிழ்ந்ததனைக் கண்டு மகிழ்ந்த களமரைப் போல நீயும் மகிழ்ந்தவர்க் கண்டு மகிழ்ந்தாய்!' என்பதும் உள்ளுறை பொருளாகும்.

58 நீலக் கடல்சூழ் இவ்வுலகில்
நெருப்புக் கோளின் வெப்புற்று
நெறிபட் டோவ்வாப் பொறியுற்று
நீடுந் தூசி அடையுற்றுக்
காலம் விளைத்த ஒருகருங்கல்
கருதா ரின்றி வழிகிடக்கக்
கண்டு நினைந்து கைக்கொண்டு
கனத்துப் படிந்த துகளகற்றிக்
கோலம் விளைத்து வடிவமைத்துக்
கோடி நுணுக்கங் குலவிவரக்
கோயிற் கடவுட் படிமத்தைக்
குறித்துப் பொளியும் ஓசையொடு
காலங் குலவும் திருவழுந்தூர்க்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே. (57)

———

கால்+அங்கு+உலவும் (கால்—காற்று).
'காலம் விளைத்த ஒருகருங்கல்லானது சிற்பியின் கைவண்ணத்தால் வணங்கும் கோவிற்படிமம் ஆனாற்போலக் காலத்தால் விளைந்த இராமனின் கதைக்கு உன் கைவண்ணத்தால் மானிடர் வணங்கும் தெய்வத் தன்மையை அளித்தாய்!' என்பது உள்ளுறை பொருள்.

59 எண்ணெய் தேய்த்துக் குளிப்பதற்கோ
எந்தாய் உன்னை இனியழையேன்!
எண்ணெய் கண்ணுக் கினிக்கட்டேன்!
ஏதுங் கசப்பு மருந்தூட்டேன்!
மண்ணிற் புரண்ட தேனென்று
மறந்தும் என்றுங் கேளேனே!
வாயில் வடியும் நறுந்தேனை
வழித்துத் துடைக்க இனிக்கருதேன்!
விண்ணின் நிலவை வேண்டினையோ?
மின்னும் உடுக்கள் விரும்பினையோ?
வெறிதே கண்ணைக் கசக்குவதேன்?
விம்மிப் பொருமல் உனக்கழகோ?
கண்ணிற் குவளை மலரவரும்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே. (58)

உன்னைக் கடியேனே

---

உடுக்கள்—விண்மீன்கள்.

60 சாலிக் கதிர்செந் தாமரையில்
சாய்ந்து தொங்குஞ் சால்பொப்பத்
தங்கச் சுட்டி பட்டமொடு
சாந்துப் பொட்டில் பட்டாடத்
தாலி ஐந்து படைதழுவிச்
சந்த மார்பில் தழைத்தாடத்
தயங்கு மகரக் குழையாடத்
தனித்த வலயம் கைக்கடகம்
ஆலித் திருக்க அரைஞாணில்
அசையும் மணிகள் சலசலக்க
அடிகொள் சதங்கை கிண்கிணியும்
அம்பொற் சிலம்பு மென்றண்டை
காலிற் செறிந்து கலகலக்கக்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே. (59)

---

ஆலித்திருக்க—ஒலித்திருக்க.

61 வடசொற் கடலின் வரைகண்ட
வசையில் ஐய வருக,தமிழ்
வளமுங் கடந்தோய் வருக,உரு
வரையோ வியமே வருக,அழற்
புடமிட் டெடுத்துப் பழங்கதையைப்
புதுக்கும் டவ்வ வருக,புகழ்
பொதிந்த மெய்யே வருக,புரை
பொருந்தாக் குணனே வருக,மொழி
கடர்கொள் நாவின் நயமுரைக்கும்
சொல்லின் செல்வ வருக,மறுத்
தொடரா மனனே வருக,ஒளி
துலங்கும் மதியே வருக,அலை
கடலின் நெடிது கற்றுயரும்
கம்ப நாடா வருகவே!
கட்டுத் தறியும் கவிபாடும்
கம்ப நாடா வருகவே. (60)



# 7. அம்புலிப் பருவம்

(வேறு)

62 ஆதித்தன் அருள்செய்ய அருங்கலைகள் நிறைவுபெற
அணிமுழு மதியு றுதலால்
அகிலத்தார் உவப்படைய ஆரிருளும்இரிந்தோட
அழகுற ஒளித ருதலால்
ஆதிக்கஞ் செல்கின்ற அரங்கொன்றைத்
[தனக்கென்றே
அமைத்தவண் நிலைபெ றுதலால்
அணிசெய்யும் புலிக்கொடிவிண் ணசைந்தாடும்
[வளவனவன்
அவையினிற் பொலிவு றுதலால்
யாதிக்கும் உறைபவர்கள்ஏமுற்றுப் போற்றிடவே
இசையொடு துதித்தி டுதலால்
யாவரையும் ஈர்க்கின்ற பாவரையும் இவன்
[நிற்கும்
இயைந்தநற் றுணையினன்காண்
ஆதித்த குலமகனின் அடலுரைக்கும் புலவனுடன்
அம்புலீ யாட வாவே!
அழகுதவழ் திருவழுந்தூர் பழகுதமிழ்க்
[கம்பனுடன்
அம்புலீ யாட வாவே! (61)

---

ஆதித்தன்—கதிரவன்;— கம்பரின் தந்தையார்;
யாதிக்கும்— எல்லாத் திசைகளிலும்; ஆதித்த குலமகன்
— இரகுவம்ச இராமன்.
(இது முதல் மூன்று பாடல் சாமம்)

63 இரக்கருணைச் சிறப்பியல்பன் எழிற்கங்கைக் கரை
[யுடையான்
இணையிலா அன்புகொண்டோன்
ஏற்றமிகும் உருவுடையான் எதிரில்லா
[வலிமையுறும்
எழிற்குகன், விலங்கி யல்புக்
குரக்குநிலைக் குரிசில்வன் கிட்கிந்தைக் குரியவனாய்க்
கொடுமையுற் றலைந்து பின்னர்க்
கோனாட்சி தான்பெற்ற வாலிதம்பி,
[வளைவிளையும்
குளிர்கடல் சூழி லங்கை
அரக்கர்குலத் தண்ணலவன் அண்ணன்வழி
[அகன்றுவரும்
வீடணன் ஆகி யோரை
அண்ணலொடு நண்பாக்கி அகங்கனிந்து
[மகிழ்ந்தனன்காண்
ஆதலின் நினைவி ழைவான்
அரசுரிமை துறந்தவனைப் பரசிடுமிப் புலவனுடன்
அம்புலீ யாட வாவே!
அழகுதவழ் திருவழுந்தூர் பழகுதமிழ்க்
[கம்பனுடன் (62)
அம்புலீ யாட வாவே!

---

வீடணன்
அண்ணல் — இராமன்;

64 உன்நிலவால் ஒளிதந்தே உலகளப்பாய்!
[பயிர்க்குலமும்
உயிர்க்குலமும் ஓங்க வைப்பாய்!
ஒருமீனும் உடனுறைய உடுக்குலமும் சூழ்ந்துவர
உலவிநீ உயர்ந்தி ருப்பாய்!
தன்கவியாற் களிதந்தே உலகளப்பான்,
[தமிழ்ப்பயிரும்
மன்னுயிரும் தழைய வைப்பான்,
தனிச்சடையன் உடனுறையத் தமிழ்ச்சுவைஞர்
[சூழ்ந்திருப்பத்
தலைநிமிர்ந் துயர்ந்தி ருப்பான்,
இன்பமிகு தென்றலொடும் உன்னோடும் பிறந்து
[வளர்ந்
தெழில்நிறைந் திலங்கு கின்ற
என்றுமுள தென்தமிழை இயம்பியிசை
[கொண்டிலங்கும்
இவன்நினக் கிசைந்த வன்காண்
அன்னமொடுங் கானடைந்தோன் அழகியம்பும்
[புலவனுடன்
அம்புலீ யாட வாவே!
அழகுதவழ் திருவழுந்தூர் பழகுதமிழ்க்
[கம்பனுடன்
அம்புலீ யாட வாவே! (63)

---

அன்னம் — சீதை; கானடைந்தோன் — இராமன்;

(வேறு)

65 கலைமதி நீயென வினைத்தொகைப் பொருளொடும்
கழறுறுவ துணர்கி லையோ!
கவினிழந்த தொவ்வொரு திங்களும் ஒருநாள்
கட்படா தொளிகு வையே!
கலைபயில் தெளிவொடு கட்டுரை வன்மைகொள்
கற்பனை வளமு டையான்,
கல்வியிற் பெரியனெக் காலமும் ஒளிர்குவன்,
கருவிலே திருவு டையான்
குலைமதி அடைந்தனை, நிலைமதி அடைந்தனன்,
குவலயம் உனைம றைக்கும்;
குலவிடும் இவனுடன்; கோமகற் கொப்பெனக்
கூறிடத் தகுதி யில்லாய்,
அலைமகள் கொழுநனின் நிலையுரை இவனுடன்
அம்புலீ யாட வாவே!
ஆர்வலர் சூழழுந் தூர்வளர் கம்பனொ
டம்புலீ யாட வாவே! (64)

---

குவலயம்—உலகம், சந்திரனை மறைக்கும் (சந்திர கிரகணம்)
குவலயம்—உலகத்தார்; இவனுடன் (கம்பரொடு) குலவிடும்—
குழைவார்கள்; (இது முதல் மூன்று பாடல் பேதம்)

66 ஏழிரு கலையொடொன் றுடனிவண் [1]நிலவாய்
[2]நிலவாய் எனவு ணர்வாய்
எண்ணெண் கலைகொளும் யாப்புக் கலையொடு
[3]நிலவாய் இலங்கு கின்றான்,
சூழிரு ளகத்தொடு சுடர்விட் டுலவிச்
சுழலுதல் நின்வ ழக்கம்,
தூயநல் லகத்தொடு சுடர்முகம் பொலியத்
துலங்குதல் இவன்ப ழக்கம்,
பூழியர் குலத்தவ ரேயுனைப் போற்றுவர்
புவிடை இவற்பு கழ்ந்து
போற்று தவரிலர், புதுமையன் இவற்குநீ
பொருந்துமா றறிய கில்லோம்
ஆழிகொள் நெடுங்கை அழகனைப் புகழ்வனொ
டம்புலீ யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வளர் கம்பனொ
டம்புலீ யாட வாவே! (65)

---

நிலவாய்- 1. நிலவாகி, 2. நிலவமாட்டாய், 3. நிலம்+வாய்—நிலத்திடை; பூழியர்குலம்- பாண்டியர் மரபு; ஆழி-அரசாணை; அழகன்- இராமன்.

67 இரவலர் காவலர் ஏற்றிட வருவாய்!
இரவுக் கெழுகு வைநீ!
எழுந்தே வளர்வாய் விழுந்தே தளர்வாய்!
இழிவெண் மதியு டையாய்!
புரவலர் இரவலர் போற்றிட வருவான்
புதுப்பொருள் ஈந்து வப்பான்,
பொருளும் அணியும் புனைந்திவன் பொலிவான்
பொதிசெம் மதியு டையான்,
[1]உரமலர் விரிந்தவற் கொருவகை யானும்
ஒப்பிலாய் எனவு ணர்ந்தும்
உனையிவன் அழைத்ததும் உன்பெறும் பேறென
உன்னுக முன்னி னைந்தே!
அரமெனக் கூர்மதி [2]உரம்பெறும் இவனுடன்
அம்புலீ யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வளர் கம்பனொ
டம்புலீ யாட வாவே! (66)

---

இரவு + அலர் (மலரும்) கா + அலர் (மலர்); இரவு—(இரத்தல்) இரவுப் பொழுது; உரம்—1. அறிவு 2. வலிமை;

68 வான்மதி! முழுமதி எனவரின் சனகியின்
வாண்முகச் செவ்வி யீவன்,
வளர்மதி எனவரின் வடிவுறும் அன்னவள்
வாணுதல் ஒப்பு விப்பன்,
கூன்மதி யாய்வரின் கோலவில் லாக்கிக்
குவவுறும் அழக னின்தோள்
குலவிட வைத்தவன் நிலவிடச் செய்துநின்
கொட்புறும் நிலைத விர்ப்பன்,
தோன்றிய புகழொடு தோன்றிய தோன்றலைத்
தொழுதிட வருகு வையேல்
தொலைவிலாப் பெருமையும் தொழுதகு
துதைந்திடப் பெறுகு வையே! [நிலைமையும்
ஆன்றநற் புதுமைகள் சான்றவிப் புலவனொ
டம்புலீ யாட வாவே!
ஆர்வலர் சூழமுந் தூர்வளர் கம்பனொ
டம்புலீ யாட வாவே! (67)

சனகி - சானகி; செவ்வி—அழகு, கொட்பு—சுழலல்;
(இதுமுதல் இரு பாடல் தானம்)

69 தண்ணளி சுரந்தருள் வெண்ணெய்நல் லூர்வளர்
சடையனை உவந்து வந்து
தன்மனம் அளித்தனன், நவில்தொறும்
தகைமிகு நன்றி தந்தான், [நவில்தொறும்
பண்ணவன் இக்கம்ப நாடுடை வள்ளல்போல்
பாரிடை வள்ள லில்லை,
பாரிபை நிகர்த்திடும் மாரியின் மேலதாப்
பாரிக்கும் தன்மை கொண்டான்;
கண்மணி யிவனுடன் விண்வெளி யிழிந்துநீ
களிவொடு கூடி நின்றால்
காரணி கொடையினன் ஆதலின் நிற்கொரு
காப்பியம் படைத்த ளிப்பான்
அண்ணிய பேர்க்கெலாம் பண்ணளிப் பானுடன்
அம்புலி யாட வாவே!
ஆர்வலர் சூழுழுந் தூர்வளர் கம்பனொ
டம்புலி யாட வாவே! (68)

---

காரணி கொடையன் — கம்பர் பெயர்களுள் ஒன்று;
அண்ணிய — அணுகிய

70 எல்லைநீத் திருக்கவும் செருக்குறு மதியாய்
மதியாய் இவன ழைப்பை!
எல்லினைப் பழமெனப் பற்றிய மாருதி
இவனுழை இருந்தி டல்காண்!
[1]செல்லுனை விழுங்கிடுந் திறமுணர்ந் திருப்பினும்
திருந்திலை! இவன்தி ருக்கைச்
[2]செல்லினைக் கருதிலை! சிவப்புறுங் கண்ணவன்
சீறியே அதையெ றிந்தால்
வல்விரைந் தேகுமோர் கணையென வந்துனை
வருத்திடும் நிலையு ணர்வாய்!
வானவர் வானரர் தானவர் யாரையும்
வரிக்குளே அடக்கி னன்காண்!
அல்லியுங் குவளையும் புல்லிடும் ஊரனொ
டம்புலீ யாட வாவே!
ஆர்வலர் சூழுழுந் தூர்வளர் கம்பனொ
டம்புலீ யாட வாவே! (69)

---

எல் – ஞாயிறு; செல் – 1 மேகம், 2 எழுத்தாணி;
(இது முதல் இருபாடல் தண்டம்)

71 *இராவணன் நீயிவன் அழைப்புக் கிணங்கா
திருத்தலில் வியப்பி லைகாண்!
இவனுறு பொறுமைக் கெல்லையொன் றுண்டென
எண்ணுக! உன் நி னைந்தால்
[1]இராவணம் செய்யுமிவ் வெறுழினன் சுவடொற்
றெழில்கவி படைப்ப வர்கள்
எள்ளள வாகிலும் இடந்தர இசையார்,
[2]இராவணம் கொண்டு ழல்வாய்!
இராவணன் வீழ்ச்சியும் இராகவன் ஆட்சியும்
இக்கவி மாட்சி மையாம்!
என்னினிப் புகல்வதோ? உன் நிலைக் கிரங்குவல்!
ஏதினிப் புகலி டஞ்சொல்?
அராபதம் முரல்பொழில் விராவிடும் நாடனொ
டம்புலி யாட வாவே!
ஆர்வலர் சூழுந் தூர்வளர் கம்பனொ
டம்புலி யாட வாவே! (70)

* இராவணன் - இரா + வ (ண்) ணன் - இரவுவண்ணன்; உன் - மனம்; இராவணம் - 1 இராதவண்ணம், - 2 அழுகை; ஏறுழினன் - வலியவன்; அராபதம் - வண்டு.

# 8. சிற்றிற் பருவம்

(வேறு)

72 கோடி யுடுவிற் கொளிகொடுத்த
குருவெண் முத்தால் எயிலெழுப்பிக்
கோட்டை யமைத்துக் குடிபுகுந்து
குறுவாய்ப் பணிலக் கலமிட்டுத்
தேடித் தேனே உலைநீராத்
தேக்கி முத்துப் பைஞ்சாலித்
தேன்சோ றடுமோர் கவனத்தால்
செல்வா! வருத லறியாது
கூடி யமர்ந்தோம் அதுவன்றிக்
கூடுஞ் செருக்கா லமரவிலை!
கோடா மனத்தாய் அதற்காகக்
கூருஞ் சீற்றப் பார்வையொடும்
ஆடிப் பெருக்குப் போல் விரைந்தாய்?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (71)

---

உடு – விண்மீன்.

73 காசிப் பட்டுக் கஞ்சுகந்தான்
கனக்கு மென்று கைவிட்டுக்
காஞ்சிப் பட்டு மெய்யணிந்து
கண்ணிற் கரிய மையெழுதி
மாசில் மாவின் கனிநாடி
வண்டு துளைத்த மறுப்போல
வண்ணக் கன்னம் மையிட்டார்
வருங்கண் ணேறு கழிதற்கே!
தூசில் தூசி தோயாமல்
தோழர் துணையா ஆடென்று
சொல்லி அன்னை உனைவிடுத்தார்
சொல்லை மீறி இவண்வந்தாய்
ஆசி கூறி அருளாயோ?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (72)

---

கஞ்சுகம் – சட்டை ; தூசு - ஆடை: தூசி – புழுதி·

74 வள்ளல் இராமன் காடாள
மைந்தன் பரதன் நாடாள
வரங்கள் பெற்ற கைகேயி
வடித்த சிற்றி லீதென்றே
உள்ளங் கொண்டாய் சிதைத்தற்கே?
உனக்கும் ஐயம் வரலாமோ?
உருத்துப் பார்த்தல் ஒவ்வாதே!
உரைநூற் கிடைக்கை உணர்ந்தோயே!
எள்ளற் செய்கை இழைப்பாயோ?
எம்மோ டிணைந்தே யாடாயோ?
எற்று முன்றுள் நோவாதோ?
ஏழை எமக்கே இரங்காயோ?
அள்ளுஞ் சுவைசேர் நூலளித்தோய்
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (73

75 கொள்ளுஞ் சுவையா றுடனமுது
கூட்டி வைத்துச் சமைத்துள்ளோம்;
கோமான் உனக்கும் விருந்தளிக்கக்
குழுமி நிற்கும் எங்களுக்கு
விள்ளுஞ் சுவையோ ரெட்டுள்ளும்
வீரச் சுவையில் நீமிக்கு
வெருவும் அச்சச் சுவையோடு
விரும்பா அழுகைச் சுவையூட்டி
உள்ளம் உவகைச் சுவைபெறவோ
ஓடி வந்து நிற்கின்ருய்?
உன்ருள் பரலி லுறலாமோ?
ஒன்னர் செயல்நீ செயலாமோ?
அள்ளிக் கொள்ளும் அழகோனே
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (74)

---

ஒன்னர் — பகைவர்

76 அட்டிற் புகையோ கார்படைக்கும்!
அரிசி களையுங் கழுநீரோ
அஞ்செங் கழுநீர் மலர்படைக்கும்!
அமுதின் கஞ்சி யாருகி
[1]மட்டில் வயலின் பயிர்படைக்கும்!
மலர்கள் சேர்ந்து தொடைபடைக்கும்!
மகர யாழை அளிபடைக்கும்!
மடிமை காணுத் தேனீக்கள்
[2]மட்டு நாடிக் கிளைதோறும்
வளரும் பிறைபோல் இருல்படைக்கும்!
மாட்சி கண்டு நூல்படைத்து
வழங்கி நின்ற பெருவள்ளால்
அட்டற் செயல்நிற் கழகாமோ?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (75)

---

மட்டு — [1] அளவு, [2] தேன்; அட்டல் — அழித்தல்.
'அழுந்தூரில் இயற்கையே படைக்கும் தன்மையுடையதாக விளங்குகிறது. அவ்வூரில் பிறந்த நீயும் நூல்படைப்பவனாக இருக்கின்றாய். அவ்வாறிருக்க எம்படைப்பாகிய சிற்றிலை நீ அழிப்பது தகாது' என்பது குறிப்புப் பொருள்.

77 சொல்லுஞ் சொல்லை வெல்லுஞ்சொல்
தோன்ற லின்றிச் சொல்கின்ற
சொல்லும் வல்ல இராகவனும்
தொடரும் இளவல் இலக்குவனும்
நல்ல தவத்துக் கோசிகனுர்
நயந்த வேள்வி காத்தற்கு
நடுக்கான் நின்றே அதுமுடித்தார்
நடந்தம் மூவர் மிதிலைக்குச்
செல்லும் வழியில் ஒருகல்லும்
செம்மல் இராமன் கால்பட்டுத்
தெரிவை யான கதையதனைச்
செப்பும் நீயோ சிறுமியர்பால்
அல்லல் இழைக்க அருகுற்ருய்?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (76)

---

தெரிவை — பெண் — அகலிகை.

'இராமன் கால் கல்லைப் பெண்ணாக்கிற்று. அதனைப் புகழ்ந்து பாடிய நீ எம் வீட்டைக் காலால் மண்ணாக்க வருகின்ருய். நீ படைத்த இலக்கியத்திற்கு நீயே முரணாக நடக்கலாமா?' எனக் குறிப்பால் வினவியதாம்.

78 கருமை மேதி கன்றுள்ளிக்
கனத்த குரலான் தான்முழங்கக்
காற்றி லேறும் அம்முழக்கும்
காயஞ் சாடிக் காருடைக்கும்,
பருவ மேகம் மழைபடைக்கும்,
பாயும் வெள்ளம் மடையுடைக்கும்,
பரவும் தென்றல் அரும்புடைக்கும்,
பரிய பொகுட்டைச் சுரும்புடைக்கும்,
உருவ வேழம் இருலுடைக்கும்,
ஒற்றைக் கதிர்நெல் உழக்குடைக்கும்,
ஒப்பில் கட்டோ கலமுடைக்கும்
ஊர! சிற்றில் உடைப்பாயோ?
அருமை படைக்கும் சோணுடா
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (77)

---

காயம் - ஆகாயம்; வேழம் - கரும்பு.

'அழுந்தூரில் கார் உடைக்கப்படுதல், மடை உடைக்கப் படுதல் முதலிய உடைப்புச்செயல்கள் ஆக்கத்திற்குப் பயன் படுகின்றன இத்தகைய ஊரில் பிறந்த நீ எவ்வித ஆக்கமும் தராத-அழிவைமட்டுமே தரக்கூடியதாகிய சிற்றில்உடைப்பை மேற்கொள்ளலாமோ? இஃது அழுநதூரில் பிறந்த உனக்கு முறையாமோ?' எனக் குறிப்பால் வினவியதாம்.

79 என்பைத் தோலே போர்த்திருக்கும்
இழிந்த உடலைக் கொண்டுலவி
இயற்கை அறிவும் இல்லாமல்
எண்ணம் போகும் போக்கேகும்
வன்பு மனத்துள் மறம்புக்கு
வடித்த பாவப் பெருவீட்டை
வளரும் அறம்தன் கால்கொண்டு
வலிந்தே அழித்தல் வழக்கன்றே!
அன்பே நிறைந்த நெஞ்சினரேம்
அமைக்கும் சிற்றில் அழிக்கவரல்
அறமோ? மறமோ? யாதுரையாய்?
அன்புற் றமர்ந்த வழக்கெதுவோ?
அன்பின் செவ்வி நனிகண்டோய்
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (78)

---

'அறம் மறத்தை அழிப்பதுதான் இயல்பு, அவ்வறம் அன்பையும் அழிக்குமோ? நீ அன்புடையார் சிற்றிலைச் சிதைப்பையேல் பெருங்குணன் என்னும் பெயருக்கு இழிவு வரும். ஆதலின் சிற்றில் சிதையற்க!' என்பது குறிப்புப் பொருள்.

80 குளவி தன்வாய் நீரிட்டுக்
குழைத்த மண்ணுற் கோட்டையெனக்
கூட்டை அமைக்கும், சிதல்தன்வாய்
குழைத்த மண்ணுற் புற்றமைக்கும்
வளமைப் புதுமைக் கோசலத்தின்
மன்னர் மன்னன் தயரதனின்
மன்னும் உயிருக் குயிராக
வயங்கும் இராமன் கொலுவிருக்கக்
கிளவி என்னும் மண்கொண்டு
கிளைத்த விருத்த நீரளைந்து
கிளத்தற் கரிய காப்பியமாம்
கேழ்கொள் கோவில் உருவாக்கி
அளவில் புகழை அடைந்தோயே
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்நூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (79)

---

'அறிவிலா உயிர்களும் கோசலத்தில் இல்லம் அமைக்கின்றன. நீயும் சொல்லே மண்ணுகக் கொண்டு காப்பியக் கோவில் அமைத்தாய்! அதனுல் பெரும்புகழைப் பரிசாகப் பெற்ருய்! எங்கள் சிற்றிலைச் சிதைத்தால் நீ புகழை இழப்பதோடு பழியையும் எய்துவாய்! ஆதலின் சிற்றில் சிதையற்க!' என்பது குறிப்புப் பொருள்.

81 பாட்டின் திறத்தால் பலர்புகழைப்
பாரிற் பரவா மற்சிதைத்தாய்!
பலருள் பதிந்த அழுக்காற்றைப்
பண்புத் திறத்தால் நனிசிதைத்தாய்!
ஈட்டம் கெழுமும் ஆயிரமாம்
இராமர் புகழை நினதாக
ஈட்டிக் கொண்டாய்! எல்லாரும்
ஏற்கும் செயல்கள் பலபுரியக்
கோட்டி தோறும் புகழ்ந்தார்கள்!
கோதை எங்கள் சிறுவீட்டைக்
குலைக்கும் ஒன்றாச் செயல்கண்டால்
கூடி நின்று பழிப்பாரே!
ஆட்டி வைக்கக் கருதுவையோ?
அடியேம் சிற்றில் சிதையேலே!
அழுந்தூர்த் தோன்று பெருங்குணனே
அடியேம் சிற்றில் சிதையேலே. (80)



---

கோட்டி—அவை, குழு;
(தொந்தரவு செய்யும் மகவை 'ஏன் ஆட்டி வைக்கிறாய்?' என்றல் வழக்கு.) 'பிறர் புகழைச் சிதைத்தலும் அழுக்காற்றைச் சிதைத்தலும் புரிந்த பழக்கத்தால் எம் சிற்றிலும் சிதைக்க எண்ணினை போலும்! ஆனால் அவற்றால் உனக்குப் புகழ் கிடைத்தது. எம் சிற்றில் சிதைத்தால் பழிதான் கிடைக்கும் ஆதலின் பழக்கத்தால்வந்த சிதைக்கும் இயல்பை விட்டொழிப்பாயாக!' என்பது குறிப்புப் பொருள்.

# 9. சிறுபறைப் பருவம்

(வேறு)

82 உதிக்கின்ற கதிரவனின் உருநிகர்த்த சூட்டுடைய
ஒண்சிறை வார ணங்கள்
உயர்குவையைச் சீக்கவொளி யுமிழ்கின்ற
உலவுமின் மினிக ளெனவே [பன்மணியை
மதிக்கின்ற குருவியினம் வலியலகாற் பற்றியவை
மரந்தொறுந் தூங்கி யசையும்
வான்கூட்டுள் பதித்துவிட வரிசையுறத்
மணிவிளக் கெனத்தி கழவே [தூங்குகிற
கதிர்க்கின்ற மாட்சியினுற் காரிருளாம் பகையகலக்
கழிமகிழ் வுயிர டையவே
காவலுறு மன்றுதொறும் மேவலுறு தூண்டாத
கதிர்விளக் கெனப்பொ லியவும்
திதிக்கின்றசெய்கைவளர் திருவழுந்தூர் வளர்செல்வ
சிறுபறை முழக்கி யருளே!
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்
சிறுபறை முழக்கி யருளே. [புலவ (81)

---

திதித்தல் - காத்தல்.

'மின்னும் மணிகளைத் தேர்ந்தெடுத்துப் பறவைகள் கூட்டில் வைக்க, அவை தூண்டா விளக்கைப் போல் விளங்கி, இருளை அகற்றினுற்போலப் பொருள் ஒளி மின்னும் சொற்களையும் தொடர்களையும் காவியத்தில் தக்க இடத்தில் அமைத்து, அவற்ருல் கற்பாரின் மன இருளை அகற்றியவன்' என்பது குறிப்புப் பொருள்.

83 வைகறையில் எழுகதிரை வரவேற்க வாரணங்கள்
வலியதஞ் சிறக சைக்கும்
மனத்திலுறு களிபொங்க இனத்தினெடு தம்
வருகென வாழ்த்தி சைக்கும் [வாயால்
மைகவரும் விழியினரும் மலர்மஞ்சந் துயிலுணர்ந்து
மலர்விழி மலர்ந்தெ ழுந்து
வாயிற்கு நீர்தெளிக்க வரச்சிலம்பின் ஒலி
வளத்தரை கோல மிடவே [முழக்கும்
கைகவரும் வளைமுழக்கும் கறவையினம் கன்றுள்ளிக்
கடம்படு குரல்மு ழக்கும்
கன்றுகளும் பால்பருகக் கருதித்தம் தாயுள்ளிக்
கனைமிகு குரல்மு ழக்கும்
செய்கவரும் நீர்முழக்கும் செறியழுந்தூர் வளர்செல்வ
சிறுபறை முழக்கி யருளே!
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்
சிறுபறை முழக்கி யருளே. [புலவ (82)

---

கனை – ஒலி.

84 வாக்குயர்ந்த வள்ளலிடம் நீக்கரிய காமமுறும்
வலியவள் உருவொ ளித்து
வஞ்சியென நஞ்சமென வஞ்சமனக் கதிர்வல்லி
வருகுவ தெனவ டைந்து
நோக்கறிந்து கொள்ளாமல் ஊக்கமுட னுரையாட
நொறுங்கிய தவளி னெண்ணம்
நூக்கரிய ஆசையினள் தாக்கணங்காய்த்
நுவலரும் இளைய சிங்கம் [திரும்பிவர
மூக்கரிந்து விட்டுவிட மொய்ம்பழிந்த சூர்ப்பணகை
மொழியுமப் புலம்ப லுக்கு
முன்னெழும்பும் ஓசைக்குப் பின்னெழும்பும்
முறைமுறை முழக்கி வரவே [தாளவிசை
தீக்கொழுந்து மலர்க்கயங்கள் சேரழுந்தூர் வளர்
சிறுபறை முழக்கி யருளே! [செல்வ
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்
சிறுபறை முழக்கி யருளே. [புலவ (83)

---

இளைய சிங்கம் - இலக்குவன்.

85 ஆற்றலிலும் அறிவினிலும் அளந்தோத இயலாத
அழகனின் வலியி கழ்ந்தே
அரக்கியவள் உரைத்தபடி அவனோடு முனி
அமர்செய முனைந்தெ ழுந்த [வோடும்
காற்றினிலுங் கனலினிலுங் கடியானைக் கொடியானைக்
கரனெனும் பெயரி னானைக்
கணைதாங்கி வில்தாங்கிக் கைவாங்கித் தலை
களத்திடைப் புரள வைத்துக் [வாங்கித்
கூற்றுவனை வரவழைத்துக் குறையாத விருந்தாகக்
கொடுத்தவக் குலக்கொ ழுந்தைக்
குழுமிவருந் தவமுனிவர் கொண்டாடிக்
குழுமினர் முழக்க மிடவே [கண்டாடிக்
தீற்றுபுகழ் செவியேற்றுத் திருவழுந்தூர் வளர்செல்வ
சிறுபறை முழக்கி யருளே!
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்
சிறுபறை முழக்கி யருளே. [புலவ (84)

---

அழகன் – இராமன்; அரக்கி—சூர்ப்பணகை.

86 தூயவினை புரிவார்க்குச் சூழ்பயனும் நன்றென்று
சொலுமொழி துலக்க முறவே
தொடர்வினைகள் இடர்தந்து படர்ந்துவரலில்
துகளற நுணித்த றிந்தார், [லென்பார்
மாயவினை புரிவார்க்கு மாயவினை உண்டென்னும்
வழக்கதும் வலிமை பெறவே
மாயவுரு மாளுகி மாரீசன் விளையாட
மதவலி எழுது புகழான்
ஆயகணை ஒன்றெய்ய அம்மாய மாரீசன்
அகம்பதிந் துயிர்க வரவே
அலறுமவன் ஓலமதும் அண்டமெலாம் எதி
அதற்கிசை அமைத்த படியே [ரொலிக்க
தேயமெலாம் புகழ்பரவும் திருவழுந்தூர் வளர்செல்வ
சிறுபறை முழக்கி யருளே!
தென்தமிழும் வடமொழியும் வந்துபணி செய்
சிறுபறை முழக்கி யருளே! [புலவ (85)

---

மதவலி – மிகுவலி; எழுது புகழான் – எழுதும் புகழுடைய இராமன்.

(வேறு)

87 எவ்வினை யாற்ற லேய்ந்த போதும்
இழிவுறு செயலைப் புரியின்
இளிவர லேற்றே இன்ன லெய்தி
இறுதியி லழிவ துறுதி;
நவ்வியின் நோக்கி தம்பி மனையாள்
நல்லெழி லுருமை வவ்வி,
நனந்தலைக் காடு தம்பி நாட
நலிவுகள் அவனுக் களித்த
வெவ்வினை வாலி வீருர் வேந்தன்
வியப்புறு வலிய னவனும்
வியன்கணை பாய்ந்து வீழ நெய்தல்
விளிபறை முழக்க மிடவே
தெவ்வினைத் தேய்க்கும் திருவழுந் தூர
சிறுபறை முழக்கி யருளே!
செவியுறு கேள்விச் செல்வக் கோவே
சிறுபறை முழக்கி யருளே. (86)

---

தெவ் - பகை.

88 நெய்யணி கூந்தல் நிலவொளி நெற்றி
நெறியறி பிணையின் விழிகள்
நிலவிடும் மங்கை மலர்முகம் கண்டு
நிறைநற விதழ்த்தா மரையும்
உய்வகை ஏதும் உறுவது காணு
தொருதனிப் பதமொ டிருந்தே
உறுதவஞ் செய்ய இருகயற் குஞ்சும்
உடனெழுந் ததிலே உகளக்
கொய்யறு குமுதக் குவிமுகை, சாரைக்
கொடுந்தலை புரையக் கயலைக்
கொளுமென அஞ்சிக் குரங்குதன் கையைக்
குனிப்புற நெரித்தும் நொடித்தும்
செய்வினை மயங்கும் திருவழுந் தூர
சிறுபறை முழக்கி யருளே!
செவியுறு கேள்விச் செல்வக் கோவே
சிறுபறை முழக்கி யருளே. (87)

---

'மனமெனும் குளத்தில் எண்ணத் தாமரையில் அறமெனும் கயல் துள்ளிக் கிடப்ப, மறமெனும் குவிமுகை, சாரைத் தலை போல் தோன்ற அறிவெனும் குரங்கு அஞ்சிக் கிடக்க அதன் அச்சம் நீங்குமாறு மெய்யுணர்வாம் பறையினை முழக்குக' என்பது குறிப்புப் பொருள்.

(வேறு)

89 திருவளர் பூவைச் சுரும்பினஞ் சேர்ந்து
தேனுகர் முழக்கொலியும்
தெளிபுன லாறு திகழலை மோதித்
திண்கரை பொருமுழக்கும்
உருகெழு கோவில் தருமுர சோங்க
ஒருகுழல் வளைமுழவம்
உயர்வகை மேளம் ஒருங்கிணை நாத
சுரமுட னுறுமுழக்கும்
இருவினை ஆய்ந்தார் ஒருநெறி நிற்பார்
இசைத்திடு தமிழ்முழக்கும்
இருகைத் தாளம் எடுத்திடு மார்ப்பும்
எழுப்பொலி பிறக்கிடவே
முருகுயர் கையால் திருவழுந் தூர
முழக்குக சிறுபறையே!
முத்தமிழ்த் துறைதேர் உத்தமக் கவிஞ!
முழக்குக சிறுபறையே. (88)

90 புகர்முக வேழம் புரையுநன் மேதி
புனலிடைப் புகுமுழக்கும்,
பொசுக்கென வாளை புரண்டெழுந் தாங்குப்
புறமெலாம் திரிமுழக்கும்,
தகர்கணு வேழப் பிழிவினை ஆலை
தருபொழு தெழுமுழக்கும்,
தனிச்சுவைச் சாறும் தழைத்தவண் ஆருய்த்
தளிர்த்தெழும் அலைமுழக்கும்,
இகலுறு காளை எதிரெதிர் தோன்றி
இடியொடு பொருமுழக்கும்
இடமெலா மோங்க, இரவலர் ஏற்க
இடுபொருள் முழக்குறவே
முகமலர் பூக்கும் திருவமுந் தூர
முழக்குக சிறுபறையே!
முத்தமிழ்த் துறைதேர் உத்தமக் கவிஞ!
முழக்குக சிறுபறையே. (89)

---

புகர் - புள்ளி,

91 வகையுறும் எழுத்தும் வளவிய சொல்லும்
வாழ்வியல் தருபொருளும்
வரைவுறும் இலக்கண வரன்முறை ஓரார்,
வளமைகள் செறிந்தொளிரும்
தொகையுறு பனுவல் தொடுதலும் இல்லார்
துணிவொடு கவியெழுதித்
துளிர்த்தெழு தமிழிற் களைகளைப் பெய்து
சுழலுவர் புல்வரெனப்
புகைமனத் தவராற் புகழ்தமிழ்த் தாயும்
புழுங்குவள் பொலிவிழந்தே
பொருந்தல ருள்ளப் புரையெனும் புட்கள்
பொருக்கென இரிந்தோட
முகைவிரி முறுவல் திருவமுந் தூர
முழக்குக சிறுபறையே!
முத்தமிழ்த் துறைதேர் உத்தமக் கவிஞ!
முழக்குக சிறுபறையே. (90)



புள் - பறவை.

# 10. சிறுதேர்ப் பருவம்

(வேறு)

92 மாரதங்கள் செலுத்துவதில் வல்லவனுந் தயரதனின்
மகவாப் பிறந்து வளர்ந்து
வரிவில்லில் தொடுகணையின் கலைபயின்று
வலத்தான் மனைழநிறத்தான் [துலங்குமொரு
பாரதத்தில் தோன்றியவன் பலநீதி அறிந்தவொரு
பழையன் இராம னெழுந்து
பாரதஞ்செய் அரக்கர்வலி பறந்தோடச் செய்
பரிவோ டுரைத்த தமிழாம் [ததனைப்
[1]பாரதத்தில் வீற்றிருந்து, தாரணிந்த பார்வேந்தர்
பணிந்தே வரிசை தரவும்
பாவாணர் வாழ்த்துரைக்கப் பல்லாண்டு பலர்
பவனிவரு பேர ரசனே, [கூறப்
தோழுந்த லில்லாத திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே. (91)

---

பார் + அதம் + செய்; 1. பா + ரதம் = பாவாகிய தேர்.

93 செப்புகிற சொல்லெல்லாம் சேர்ந்தறையும் ஆணி
செறிந்தே பொலிந்து மிளிரச் [யெனச்
சிதையாத அசையெல்லாம் சீரிழைத்த சட்ட
திகழ்ந்தே இணைந்து செறிய [மெனத்
ஒப்பரிய சீரெல்லாம் உயராரக் காலாக,
ஒன்றிய தளைகள் குடமா,
உருவாகும் தொடையாவும் உருள்கின்ற
உருக்கொள் அடிகு திரையா, [சக்கரமா,
துப்புநிறை பொருளச்சா, துலங்கும்பா தேர்த்தட்டா,
தொகுத்தஅணி மணிக ளாகத்
துதைகின்ற சந்தமெனுந் தூவண்ணந்
துகளறு மெருகு கூட்டிச் [தீற்றிப்பின்
செப்பமுறுங் காப்பியத்தேர் செலுத்துதிரு வழுந்தூர
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே. (92)

94 அறமழுங்கு மனத்தானின் அறமற்ற செயல்கடிந்
அளவிலா வலிமை அடைந்தோன் [தோன்
ஆயினுந்தன் முன்னவனை அகலாதோன்,
அருமைத் தமையன் நெடிதே [வீடணனின்
உறங்குவதும் உண்ணுவதும் உடைக்கும்ப
டுறுபோர்க் களம்பொ ருங்கால் [கன்னனே
உத்தமனின் கணையைந்தால் உறுப்புவலக்
உதவுமிடக்கை பின்னும் [கைமுன்னும்
குறங்குகளில் வலமுன்னும் இடம்பின்னும்
குருதியெனும் புனலி லுருளக் [குறைபட்டுக்
குன்றனைய உடலுருளக் கொடிமுடிபோல்
குலைவுற் றரக்கர் உருளத் [தலையுருளக்
திறமழுங்கா உழவர்சூழ் திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே. (93)

---

உத்தமன்—இராமன்; குறங்கு—தொடை.

95 வாரணங்கள் ஒரெட்டின் வலியடங்க மதமடங்க
வலிந்தே பொருத வுரமும்,
வளர்சிமய இமயத்தை வலம்வருங்கால்
வரைத்தோள் படைத்த வலியும். [பெயர்த்தபெரு
நாரதனுக் கிசைநுட்ப நயம்யாவும் உரைநாவும்,
நயந்தே சிவன்த ருமொரு
நனிவலத்து வாட்படையும், நன்மணமே
நறியமலர் பலதொ டுத்த [கமழ்கின்ற
தாரணிந்த முடிபத்துஞ் சரமொன்றுற் சிதறுண்ணச்
சரிந்தே இலங்கை யரசன்
தரைமகட்குப் புறந்தந்து சாய்ந்துருளத்
தனிவீர முடனு ருளவே [தணவாத
சேரலரும் புகழ்பரவச் செய்ததிரு வழுந்தூர
சிறுதேர் உருட்டி அருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே. (94)

---

உரம் - மார்பு; சேரலர் - பகைவர்; பரவ - துதிக்க,

96 கள்ளமன வாளரக்கன் காமக்கண் பட்டவுடல்
களங்கம் அடைந்த தெனவே
கருதுபவர் இருப்பினவர் கருத்ததனை அகற்
கருதும் திறம்பா மனத்தள் [றற்குக்
புள்ளிமயிற் சாயலினள் பூவைமொழிச் சானகியாள்
புகையும் எரியிற் புகுந்து
பொற்புடைய கற்பொளியைப் புவியோர்க்கும்
பொருந்தும் வகையி னிறுவ [கணவற்கும்
எள்ளளவும் ஐயமிலா தேற்றுக்கொண்டி லக்குவனொ
டிலங்கை யகன்ற யோத்தி
எய்தற்கே இராகவனும் எழில்புட்ப கவிமானம்
இயக்கிவிசும் பூர்ந்த செலவைத்
தெள்ளுதமி ழேற்றிமகிழ் திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே. (95)

97 அரியணையி னடிதாங்கி அனுமன்தான் சுமைகொள்ள
அரியின் குலத்து தித்த
அங்கதன்தான் உடைவாளை அங்கைகொள,
அண்ணனுக் குரிய தென்றே [அரசுரிமை
அரியதவம் ஒருபதினன் காண்டுகளும் செய்பரதன்
அணிவெண் குடைக விக்க,
ஆருயிராம் ஈரிளவல் சீருயரும் கவரிகொள,
அடையாக் கதவம் உடையான்
விரிபுகழன் சடையப்பன் விழைமரபில் வருமொருவர்
மிளிர்பொன் மவுலி ஏந்த,
வேதஞ்சொல் வசிட்டன்தான் வீரற்குப்
விழிகளாற் கண்டு மலரத் [புனைகாட்சி
தெரிதருபுன் னகையோடு திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே. (96)

---

அரியின் குலம் — குரங்குக் குலம்; வீரன் — இராமன்.

98 முன்மலர்ந்த தாமரையும் முகையவிழாச் செங்குமுதம்
முருகார் குவளை மலரும்
மொய்த்துவளர் கயத்துள்ளே முடுகிப்பாய்
முனிவுறு வாளை வெடிபோய்த் [மேதியினுல்
தென்னையிள நீர்க்குலையைத் தீண்டிடவும் அவ்விளநீர்
தெளிநீர்க் கயத்து ளுதிரத்
திடுக்குற்ற அம்மேதி திசைபார்த்துக் கரையேறத்
தெருளுற்ற வாளை மீன்கள்
பின்மகிழ்ந்து கயத்துகளப் பெருவளையின் வாய்நின்று
பிணைகால் பதித்த அலவன்
பேருவகை யொடுபார்க்கப் பின்னுந்து
பெரியபா ராட்டி சைக்கத் [தவளைகளும்
தென்றல்வளர் மருதவளஞ் சேரமுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி அருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே. (97)

---

வெடிபோய் – தாவி

99 தொழுவோரின் உள்ளத்துள் துளும்புகிற பேருவகை
தொடர்ந்து நிலைபெற் றிலங்கச்
சுடர்கின்ற வன்கொழுவுந் தொளைக்கின்ற
தொடிப்பு ழுதிகஃ சாகவே [நிலத்தின்மண்
உழுவோரான் உணக்கமுற உயர்தொழிலால் விளை
உறுநெற் கதிர்கள் பொலிய [புலமும்
ஊக்கமொடு கதிரறுத்துந் தேக்குகளஞ்
ஒளிக்கண் மருத மகளிர் [சூட்டடித்தும்
எழுந்தோகை முகம்பொலிய எவ்விடத்தும் நில்லாமல்
இவணவண் சுழன்று திரிய
எருத்தசைய அவர்போல இயங்கவுடற்
இளைத்த விலவா யிருக்கச் [கண்களெலாம்
செழுந்தோகை மயிலாடுந் திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே. (98)

---

தொழுவோர் — தொழுதுண்டு பின்செல்பவர்.

100 செல்விருந்து பேணற்கும் வருவிருந்து காணற்கும்
செழிக்கும் மனத்து மகளிர்
செந்நெல்லைப் புழுக்கியதைச் செங்கதிரின்
சிதறு துலர்த்தி வரவே [இளஞ்சூட்டில்
இல்லிருக்கும் முன்புறத்தில் எழிற்சிறைய
எளிதிற் கவர முயல [வாரணங்கள்
எழுந்தோச்ச எண்ணுமல் இருங்குழையைப்
இடத்திற் பரவு குழைகள் [பறித்தோச்ச
நல்லிளைய சிறுவரெலாம் நடைபயிலுஞ் சிறுதேரின்
நடையைத் தடுத்து நிற்க
நலியுமவர் போலன்றி நன்னெறியை
நளியுங் குழைகள் உருளச் [உண்ணினைந்து
செல்குழுமி வளஞ்செய்யுந் திருவழுந்தூர் வருசெல்வ
சிறுதேர் உருட்டி அருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி அருளே. (99)

---

நளி – செறிவு (நிறைவு); செல் – மேகம்.

101 பளிங்கதனாற் பாரமைத்துப் பவளத்தாற்
பசும்பொன் முகடு வேய்ந்து [காலமைத்துப்
பலகோடி விண்மீனும் பளிச்சிடுதல் போல்வயிரம்
பதித்துக் கதிரை விழுங்கும்
மிளிர்வளரும் மரகதங்கோ மேதகம்புட் பராகமணி
மிடைந்து கதிர்வி ரிக்க
மின்னலுறு மாணிக்கம் கண்ணிலுறு
வெங்கதி ரெழுந்து லாவ [போதெல்லாம்
நளிர்கடலில் விளைமுத்துள் ஒளிநீர்மை பலவாய்ந்து
நவையில் பரிய முத்தால்
நால்கின்ற மாலைகளை நூல்கொண்டு சுற்றியிட
நளினந் திகழ முகுடன்
தெளிநுட்ப மதிக்கலைஞர் உளிகொண்டு யாத்துள்ள
சிறுதேர் உருட்டி யருளே!
செப்பரிய புகழ்த்தேரிற் செலவயரும் உயர்கம்ப
சிறுதேர் உருட்டி யருளே. (100)



---

பார்—தேர்த்தட்டு; கால்— சக்கரம்; மிளிர்—ஒளி;
வெங்கதிர்— ஞாயிறு; நால்கின்ற—தொங்குகின்ற.

முற்றும்.